# ஜனாஸா
# தொழுகை விளக்கம்

தொகுத்தவர்:

**வா. கமாலுத்தீன் ஆலிம்**

வெளியீடு

**ஸலாமத் பதிப்பகம்**

பதிப்பாளர், விற்பனையாளர் & ஏற்றுமதியாளர்
விநியோகஸ்தர்கள்: குர்ஆன் மற்றும் இஸ்லாமிய நூல்கள்
95 (புதிய எண் 197), லிங்கிச் செட்டித் தெரு,
முதல் மாடி, சென்னை – 600 001.
போன் : 044 – 25211981, 42167320
Tel/fax: 044 - 25211981

PDF ISLAM

**புத்தக விபரக் குறிப்பு**

©Copy Right : Salamath Pathippakam
All Rights reserved

நூலின் பெயர் : ஜனாஸா தொழுகை விளக்கம்
தொகுத்தவர் : வா. கமாலுத்தீன் ஆலிம்
பதிப்புரிமை : ஸலாமத் பதிப்பகம்
முதல் பதிப்பு : ஹிஜ்ரி 1425 - ஸபர்
2004 - ஏப்ரல்
8-ஆம் பதிப்பு : ஹிஜ்ரி 1432 - துல் ஹஜ்
2011 - நவம்பர்
9-ஆம் பதிப்பு : ஹிஜ்ரி 1436 - ரபீவுல் அவ்வல்
2015 - ஜனவரி
பக்கங்கள் :48
கிடைக்குமிடங்கள் : ஸலாமத் புக் ஹவுஸ்
90, லிங்கிச் செட்டித் தெரு.
மண்ணடி, சென்னை-1.
☎ : 044-4216 7320, 43517320

ஸலாமத் புக் சென்டர்
(மஸ்ஜிதே மஃமூர் வளாகம்)
168/3, அங்கப்ப நாயக்கன் தெரு,
சென்னை-1. ☎ :044-42358274

ஹதியா : ரூ. 17.00

இந்த புத்தகத்தின் எந்த ஒரு பகுதியையோ அல்லது முழு புத்தகமாகவோ எங்களின் எழுத்து மூலமான அனுமதி இல்லாமல் அச்சிடவோ அல்லது வேறு முறையில் உற்பத்தி செய்யவோ கூடாது.

ஸலாமத் பதிப்பகம்

PDF ISLAM

*பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர் ரஹீம்*

# முன்னுரை

நஹ்மதுஹு வநுஸல்லி அலா ரசூலிஹில் கரீம்.

இறப்பு என்னும் குடிப்பைக் குடிக்காதவர்கள் உலகில் எவருமில்லை. நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும், அழைத்தாலும், அழைக்காவிட்டாலும், நமக்குரிய 'அஜல்' காலத் தவணை முடிந்துவிடுமாயின், மூச்சைப் பிடித்துப் பேச்சை முடிக்க 'மலக்குல் மௌத் வந்து விடுவார்கள். அவர்களுக்கும் ஓர் 'அஜல்' இருக்கிறது; அவர்களையும் அஃது வந்தடையும்.

ஆக, என்றைக்காவது இவ்வுலகைவிட்டும் பிரிந்துவிடும் நிலையிலுள்ள நாம், அது பற்றிச் சிந்திக்கின்றோமா?

எல்லோரையும் விட்டு விட்டுத் தனித்த நிலையில், இருட்டறையில், கிடப்போமே, அவ்விருட்டறை ஒளி பெற்றுத் திகழ்ந்திட ஏதாவது ஆயத்தங்களைத் தேடி வைத்துள்ளோமா என்பன பற்றிய சிந்தனை பலருக்கும் இல்லாமல் போய்விட்டது.

அதுபற்றிய சிந்தனையைத் தூண்டுவதே இச் சிறு நூல்.

மேலும், முஸ்லிம்கள் எனத் தங்களைச் சொல்லிக் கொள்பவர் களுக்கு ஜனாஸாத் தொழுகையைப் பற்றியும், அத்தொழுகையில் ஓதப்படும் துஆக்கள் பற்றியும் தெரியாமலேயே இருந்து வருகின்றது. அதனை நிறைவேற்றும் முறைகளையும், தெளிவாகப் புரிந்து செயல்பட இச்சிறு நூல் பயன்படும்.

யான் இதனைச் சிறிய அளவில் வெளியிட்டேன்; அந்நூலையே விரிவாக்கித் தந்துள்ளேன். படித்துப் பயன் பெறுக!

PDF ISLAM

இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய கண்ணியத்திற்குரிய நத்வி ஹலரத் அவர்களுக்கு என் ஆழிய நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்நூலின்கண் குற்றம்குறைகள் காணும் அறிஞர்கள் சுட்டிக்காட்டினால் திருத்திக் கொள்கின்றேன்.

நிறைகள் அனைத்தும் அல்லாஹ் ஒருவனுக்கே!

**வஸ்ஸலாம்.**

**வா. கமாலுத்தீன் ஆலிம்**

# பதிப்புரை

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

அல்ஹம்துலில்லாஹ்! இதற்கு முன் அபூயூசுப் அவர்கள் எழுதிய பல நூல்களையும் விற்பனை உரிமை பெற்று, பல தஃலிம் தொகுப்புகளையும் வெளியிட்டதை வாசகர்கள் நன்கு அறிவீர்கள்:

இப்பொழுது ''ஜனாஸா தொழுகையின் விளக்கம்'' (ஹனபி – ஷாபியீ) என்ற நூலை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்துகிறோம்.

இந்நூலில் ஏதும் பிழையிருப்பின் எங்களுக்குத் தெரிவிக்க வேண்டுகிறோம். இன்ஷா அல்லாஹ் அடுத்த பதிப்பில் திருத்திக் கொள்கிறோம். எல்லாம் வல்ல அல்லாஹ் நம்முடைய முயற்சியை ஏற்றுக் கொள்வானாக!

ஆமீன்!

**ஸலாமத் பதிப்பகம்**

PDF ISLAM

கோட்டக்குப்பம் ஜாமிஅத்துர் ரப்பானிய்யா
அரபிக்கல்லூரியின் தலைவரும், பன்னூல் ஆசிரியரும்,
அஞ்சா நெஞ்சருமான

மௌலானா மௌலவி

## அல்ஹாஜ் அப்துஸ் ஸமத் நத்வி ஹலரத்

அவர்கள் அன்புடன் வழங்கிய

# அணிந்துரை

இஸ்லாமிய சோதரீர்! அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

அகில உலகையும் படைத்துப் போஷித்துப் பரிபக்குவப் படுத்தும் அல்லாஹ்வே மனிதனைப் படைத்து, இவ்வுலகில் வாழச்செய்கின்றான். வாழ்வையும், மரணத்தையும் படைத்ததன் குறிக்கோளையும் தன் திருமறையில்,

“உங்களில் நற்செயல் புரிபவர் யார் என்பதைப் பரீட்சிக்கவே அல்லாஹ் மரணத்தையும், வாழ்வையும் படைத்திருக்கிறான்.”

*திருக்குர்ஆன் 67:2*

என்று தெளிவுபடுத்தியுள்ளான். இத்திருவசனத்தில், முதலில் படைக்கப்பட்டது மரணம் என்பது தெளிவாக்கப்பட்டுள்ளது.

வாழப்பிறந்த மனிதன் ஒருநாள் மரணித்துத் தீர வேண்டும் என்பதும் மறுக்க முடியாத உண்மை.

வாழப் பிறந்த மனிதன் ஒருநாள் மரித்தே தீர வேண்டும் என்பதை முஸ்லிம்கள் நன்குணர்ந்திருக்கின்றனர். சர்வதுறைகளிலும் வழிகாட்டியுள்ள இஸ்லாம், பிறப்பு இறப்பின் போது, எப்படி முஸ்லிம்கள் நடந்து கொள்ள வேண்டும் என்பதற்கும் ஷரீஅத் வழி முறைகளை வகுத்தளித்துள்ளது.

PDF ISLAM

மௌத்தாகி விட்டபின் மய்யித்தைக் குளிப்பாட்டி, கஃபனிட்டு, ஜனாஸாத் தொழ வைத்து, கப்ரில் அடக்குவது சம்பந்தமான நெறிமுறைகளைத் தெரிந்து கொள்ள முஸ்லிம்களில் பலர் அக்கறை காட்டுவதில்லை, இதற்குத்தான் இமாமும், முஅத்தினும் இருக்கின்றனரே என்று மெத்தனமாக இருந்து வருகின்றனர். ஜனாஸாத் தொழுகையில் கலந்து கொள்ளும் அனேகருக்கு ஜனாஸாத் தொழுகை எப்படித் தொழுவது, என்னென்ன ஓதுவது என்பதே தெரியாமலிருப்பது வேதனைக்குரியதாகும்.

பெரும்பெரும் மார்க்க, சட்ட நூல்களை யாரும் வாங்கிப் படிக்கவும் முடியாது, ஜனாஸா சம்பந்தமாக உலமாக்களால் வெளியிடப்பட்ட நூல்களைப் பெரும்பாலானவர்கள் வாங்கிப் படிப்பதும் கிடையாது. இப்படியே வாழ்ந்து மரணித்து அடக்கப்பட்டு விடுகின்றனர்.

“நபி மொழி கேளீர்” “திருமணமும் அதன் சட்டங்களும்” “அறிவுரைக்கொத்து” இறைநேசர்களும் இணைவைத்தலும்” ‘முத்தான கடமைகள் மூன்று” “குர்பானி என்றால் என்ன?” “பொறுமையின் சிறப்பு” “கலிமாவும் தொழுகையும்” போன்ற நூல்களை எழுதியுள்ள, மார்க்க சீர்த்திருத்தத்தில் ஆர்வம் கொண்ட, ஜனாப், பாண்டிச்சேரி, வா. கமாலுத்தீன் ஆலீம் அவர்கள் தொகுத்து எழுதியுள்ள (அஸ்ஸலாத்துல் ஜனாஸா) ‘ஜனாஸா தொழுகை’ என்னும் இச்சிறு நூல் சமுதாயத்தில் நிலவியுள்ள இப்பெருங்குறையை நீக்க உதவும் வகையில் அமைந்துள்ளது.

முஸ்லிம் சகோதரர்கள் இதைப் பன்முறைப் படித்து, ஜனாஸா தொழுகையின் துஆக்களை மனனம் செய்து, மரணத்திற்குப் பின் செய்ய வேண்டிய இறுதிக் கடமைகளை முறையர்கச் செய்து, இறந்துவிட்டவர்களுக்கு நன்மைகளைச் சேர்ப்பிப்பார்களாக!

மரணத்தையும், மரணத்திற்குப் பின்னுள்ள நித்திய வாழ்வையும் வெற்றிகரமாகவும், மகிழ்ச்சிகரமாகவும் ஆக்கிக் கொள்ள வல்ல அல்லாஹ், யாவருக்கும் நல்லருள் புரிவானாக! ஆமீன்!

**இங்ஙனம்**

**அப்துஸ் ஸமத் நத்வி**

PDF ISLAM

# மரணத்தின் சிந்தனை!

வல்லோன் அல்லாஹ் தன் அருள் மறையில்,

كُلُّ نَفْسٍ ذَائِقَةُ الْمَوْتِ

"குல்லு நஃப்ஸின் தாயிகத்துல் மௌத்"

"ஒவ்வோர் ஆன்மாவும் மரணத்தைச் சுகித்தே தீரும்," என்றும்,

"நீங்கள் மலைகளைக்குடைந்து, அதனுள் வாழ்ந்த போதிலும், உங்களை மரணம் பிடித்தே தீரும்" என்ற கருத்தின் அடிப்படையிலும், எச்சரிக்கின்றான். ஆக, மௌத் என்னும் இறப்பு எவரையும் விடாது; எவருக்கும் அது விதிவிலக்கல்ல!

மரணத்தைப்பற்றி நபி (ஸல்) அவர்கள்: மரணத்தின் வேதனைகளை மனிதர்கள் அறிவது (உணர்வது) போன்று, ஆடு, மாடு ஒட்டகைகள் அறிந்திடுமாயின் அவைகள் மெலிந்து, எலும்பும் தோலுமாக ஆகிவிடும்; பிறகு, மனிதர்கள் உண்பதற்குச் சதைப்பிடிப்புள்ள கால்நடைகள் – கிடைக்காது போய்விடும்" என்றும்,

"உங்களில் ஒரு முஃமினான மனிதர் சக்ராத்தில் (மரணப்படுக்கையில்) அனுபவிக்கின்ற வேதனையாகின்றது உயிருள்ள ஒரு மனிதனைக் கூர்மையான வாளால் எழுபதுமுறை சிறுகச்சிறுக வெட்டுவதை விடவும் மிக்க வேதனையளிக்கக் கூடியதாகும்; என்றும்,

"இறப்பு எனும் மௌத்தானது உங்கள் இன்பங்களையெல்லாம் அழித்து, உங்கள் சக்திகளையெல்லாம் குன்றச்செய்து, உங்கள் மனைவி மக்கள் அனைவரை விட்டும் பிரித்துவிடுவதற்கு முன்னர் நீங்கள் மரணத்தை நினைவு கூர்ந்து, நற்செயல்களை மிகுதியாகச் செய்து வாருங்கள்" என்றும் கூறியுள்ளார்கள்.

"நுஸ்ஹத்துல் மஜாலிஸ் – தன்பீஹுல் காஃபிலீன்"

PDF ISLAM

மேலும், இமாமுல் அஃளம் அபூஹனீபா (ரஹ்) அவர்கள்,

"உயிர் கைபற்றப்படும் நேரத்தில்தான், பெரும் பாலும் ஈமானும் பறிபோய் விடுகின்றது" எனக்கூறுகின்றார்கள்.

காரணம், என்னவென்றால் இறையச்சம் இல்லாமையும், காலமெல்லாம் குஃப்ரின் பாலும், ஷிர்க், பித்அத்தான செயல்களின்பாலும் இறையச்சமற்றவனின் மனம் சென்றுவிடுவதாலும், மரணத்தின் போது, (சக்ராத் வேளையில்) அந்த மனிதனின் நாவு திருக்கலிமாவை மொழிய முடியாது ஷைத்தான், அந்நேரத்தில் தன் வேலையைக் காட்டத்துவங்கி விடுகின்றான்; எனவே! இறுதி முடிவு?

## மரண வேளையில்!

ஒரு பெரியார் சக்ராத்தில் இருக்கும் நிலையில், ஷைத்தான் அவரிடம் வந்து, இருவிரல்களைக் காட்டினான். அவர் திணறினார். காரணம், இறைவன் இரண்டு எனக்கூறு! என்றான். இப்பெரியாரின் ஷைக் மிக தொலைவில் இருந்தார்.

தமது சீடர் கடைசி நேரத்தில் ஷைத்தானின் வலையில் வீழ்ந்து, அவன் கூறியதைக் கூறி எங்கே ஈமானின்றி இறந்து விடுவாரோ என்றஞ்சி, "குல்ஹுவ வல்லாஹு அஹத்" என உரக்கக் கூறினார். தமது ஷைகுவின் ஞானக்குரல் செவியில் பட்டதும்.

"குல்ஹுவல்லாஹு அஹத்" என்று கூறினார், உடனே ஷைத்தான் விலகிப் போய்விட்டான்; அதன் பின் கலிமா மொழிந்த நிலையில் அவரின் உயிர் பிரிந்தது.

ஆம், விலாயத் பெற்றவரையே ஷைத்தான் இறுதி நேரத்தில், தன் வலையில் சிக்கவைத்திட்டான் எனும் போது, நம்போன்றவர்களை என்ன பாடுபடுத்துவான் என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

அல்லாஹ், அவனின் ஷைத்தானின் தீங்கிலிருந்து காப்பாற்றுவானாக! 'ஹவ்வின் அலைனா சக்ராத்தல் மௌத்'

PDF ISLAM

# இல்யாஸ் நபியின் ஆதங்கம்!

ஹலரத் இல்யாஸ் (அலை) அவர்களிடம் மலக்குல் மௌத் (அலை) அவர்கள் வருகை தந்து, "உங்கள் உயிரைக் கைப்பற்றி வருமாறு அல்லாஹ் ஏவியுள்ளான்" எனக் கூறியதும், அதைக் கேட்ட நபி அவர்கள்' திடுக்குற்று அழ ஆரம்பித்து விட்டார்கள்.

இதனைக் கண்ணுற்ற இஸ்ராயில் (அலை) அவர்கள்,

"நபியே! இந்த அழுகை உலகை விட்டுப் பிரிகின்றோம் எனும் வேதனையினாலா, மரணத்தை எண்ணியா?" எனக் கேட்டார்கள். அதற்கு நபி அவர்கள்,

"நான் உலகத்தை விட்டுப் பிரிவதை நினைத்து அழவில்லை, எனினும், என் இறப்பிற்குப்பின், நல்லடியார்கள் – பலர் அல்லாஹ்வைத் தொழுது திக்ர் செய்து வருவார்களே, நமக்கு அத்தகைய நல்வாய்ப்பு அற்றுப் போய்விட்டதே என்று நினைத்து அழுகின்றேன்" என்றார்கள். அது சமயம், அல்லாஹ்,

"ஓ மலக்கே! நம்முடைய நபி இல்யாஸ் எம்மை வணங்கவும், திக்ர் செய்யவும், ஆதரவு வைத்துள்ள காரணத்தால், நீர் அவரின் உயிரைக் கைப்பற்ற வேண்டாம்; அவரை மறுமை நாள் வரையும் உயிர் வாழச் செய்தேன்". என ஆணையிட்டான்.

பின்னர், இல்யாஸ், இத்ரீஸ், ஹிலுறு, ஈஸா (அலை) ஆகியோர் மறுமை நாள் வரையும் வாழ்ந்திருந்து இறப்பெய்துவார்கள்.

*துர்ரத்துன்னாஸிஹீன்*

"மனிதர்களே! உங்கள் இறைவனை அஞ்சிக் கொள்ளுங்கள்! இன்னும், அந்த (மறுமை) நாளைக் குறித்தும் அஞ்சிக் கொள்ளுங்கள்! (அந்நாளில்) தந்தை தன் மகனுக்கு எந்த ஒரு கடமையையும் நிறைவேற்ற சக்தி பெற மாட்டார். (அதேபோன்று) பிள்ளையும் தம் தந்தைக்கு எதையும் நிறைவேற்றி வைக்க இயலாது.

*திருக்குர்ஆன் 31:33*

PDF ISLAM

# ஆணவம் கொள்ளாதே!

“திக்ருல் மௌத்” என்னும் கிதாபில் எழுதப்பட்டுள்ளது – முற்காலத்தில் உயிர்வாங்கும் வானவராகிய இஸ்ராயீல் (அலை) அவர்கள் சில பொழுது, மனிதர்களின் தோற்றத்தில் வந்து உயிரைக் கைப்பற்றுபவர்களாக இருந்தார்கள். அவ்வாறிருக்கும் போது, ஒருமனிதன் ஏராளமான செல்வங்களைச் சேர்த்துவைத்து உல்லாச வாழ்க்கையில் மிதந்து வந்தான்.

அவன் ஒரு முறை தன் உற்றார் உறவினர்களைத் தன் வீட்டிற்கு அழைத்துப் பெரியளவிற்கு அவர்களுக்கு விருந்து வைத்தான். அவனது அழகுமிகு மாளிகை அல்லோலகல்லோலப்பட்டது. அவன் ஓர் ஆடம்பர இருக்கையில் சாய்ந்து கொண்டு, தன் மனத்துக்கு இப்படிச் சொன்னான்.

“ஓ மனமே! நான் உனக்குத் தேவையான அளவிற்குச் செல்வத்தைக்குவித்து வைத்துள்ளேன்; நீ அவற்றைக்கொண்டு இன்பம் பெற்று, மகிழ்வுடன் இரு!” என்று சொன்னான். அந்நிலையில், மலக்குல் மௌத் (அலை) அவர்கள், ஓர் ஏழையைப் போன்று தோற்றம் கொண்டு, அவன் மாளிகையின் கதவைத் தட்டினார்கள். உடனே அவனது பணியாட்கள் ஓடி வந்து கதவைத் திறந்து, ‘யார் நீ? உனக்கு என்ன வேண்டும்?” என்று அதிகாரத்துடன் வினவினார்.

மலக்குல் மௌத் (அலை) அவர்கள், “உங்கள் எஜமானைப் பார்க்க வேண்டும் அவரைக் கூப்பிடுங்கள்” என்றார்கள். அவர்கள் கூறியதைக் கேட்ட பணியாட்கள்,

“ஏய்! பிச்சைக்காரப்பயலே! நீ அழைத்தால் எங்கள் எஜமான் வருவாரா?” என்று கேட்க,

“ஆம்; நான் அழைக்கின்றேன், அவர் வரத்தான் வேண்டும்” என்றார்கள்.

உடனே, அவர்கள் தம் எஜமானனிடம் சென்று செய்தியைச் சொல்ல, அவன், ஆணவத்துடன், “நீங்கள் அவனைச் சும்மாவாவிட்டு

வந்தீர்கள்; அவன் கைகால்களை முறித்திருக்க வேண்டாமா?'' எனக் கத்தினான். உடனே, மலக்குல் மௌத் (அலை) அவர்கள், ஓங்கிக் கதவில் அடித்து, ''நான் மலக்குல் மௌத், வந்திருக்கின்றேன்'' என்று உரக்கச் சொன்னார்கள். இதனைக் கேட்டப் பணியாளர்கள் அதிர்ந்து போய் தம் எஜமானிடம் போய்க் கூறினார்கள்.

இதற்கிடையே மலக்குல் மௌத் (அலை) அவர்கள், வீட்டிற்குள் சென்றார்கள். எஜமான் மருண்டுபோய் அவர்களிடம் ஓடி வந்து, மெதுவாக, தனக்குப் பதிலாக வேறொருவனை அழைத்துக் கொள்ளுங்கள்'' என்றான்.

இஸ்ராயீல் (அலை) அவர்கள், அச் செல்வனை (பணக்காரனை) நோக்கி, உன்செல்வங்களை முறைப்படி எப்படிச் செய்ய வேண்டுமோ அப்படிச் செய்து கொள்; நான் உன்னுடைய உயிரைக் கைப்பற்றப் போகிறேன்; உன் உயிரை வாங்காது நான் வெளியில் செல்ல மாட்டேன்'' என்றார்கள்.

அவன் தன்செல்வங்களையெல்லாம் குவித்து வைத்து, அவற்றை நோக்கி, மிகவும் வேதனையுடனும், கவலையுடனும், ''அல்லாஹ் உன்னை லஃனத்துச் செய்வானாக. என்னை நீயல்லவா, எனது நாயனை வணங்கி வழிபடாமல், அவனுக்கு மாறு செய்யும்படி, இக்கோலத்தில் ஆக்கி விட்டாய்'' என்றான்.

அச் செல்வக்குவியல்கள் அவனை நோக்கிக் கூறிற்றாம்.

''நீ ஏன் என்னைப் பழிக்கின்றாய்? மாமன்னர்களிடமெல்லாம் என் மூலம் பெருமையடித்தாய்; தக்வா உடையவர்களுக்கு எதையும் கொடாமல், என் மூலம் அழகிய பெண்களிடம் இன்பம் அனுபவித் தாய்! மேலும், தீய வழிகளிலெல்லாம் என்னைச் செலவழித்தாய்! நான் அப்பொழுது உன்னை எதுவும் கூறவில்லையே! நீ நல்ல வழியில் செலவு செய்திருப்பாயாயின் உனக்குப் பயனளித்திரு ப்பேனே'' எனக்கூறிமுடித்ததும், இஸ்ராயீல் (அலை) அவர்கள் அவனின் உயிரைக் கைப்பற்றினார்கள். அவன் அப்படியே மரம் போல் கீழே சாய்ந்தான்.

PDF ISLAM

“சில மனிதர்களைச் சிரிக்கும் நிலையில் கண்டு நீங்கள் மௌத்தை நினைப்பீர்களாயின் இவ்வாறு சிரிக்கமாட்டீர்கள். கப்ராகிறது, நல்லோர்களுக்கு சுவனத்துப் பூங்காக்களில் ஒன்றாகும். பாவிகளுக்கு நரகத்தின் கிடங்காகும்.” *(அல்ஹதீஸ்)*

எனவே, இறையடியார்களே! மரணத்தின் சிந்தனை உங்கள் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துவிட வேண்டும். அல்லாஹ்வை மறந்து செல்வத்தின் செழிப்பில் கண் மூடித்தனமாக நடப்போமாயின். மரண வேளையில் மிகவும் துயரப்பட்டவர்களாகவும், பெருந்துன்பங் களைச் சுமந்தவர்சுளாகவும் கப்ரைச் சென்றடைய நேரிட்டுவிடும்.

எனவே, நாம் அல்லாஹ்வை மறவாது, அவன் நமக்கு வழங்கியுள்ள செல்வத்தை, அவன் விரும்பும் வழியில், அண்ணலார் காட்டிய அறவழியில் செலவு செய்து, கப்ரின் வேதனைகளை விட்டும் காப்பாற்றிக் கொள்வோமாக!

அல்லாஹ் நம் அனைவருக்கும் சக்ராத்தின் வேதனைகளை இலேசாக்கி, சுவனப் பூங்காவில் நுழைந்திடும் நற்பேற்றினை நல்குவானாக! ஆமீன்!

# ஜனாஸா

மய்யித்தைக் குளிப்பாட்டுவதும், கஃபன் அணிவிப்பதும், தொழவைத்து அடக்கம் செய்வதும், ஃபர்ளு கிஃபாயா ஆகும், (ஃபர்ளு கிஃபாயா என்றால் – ஒரு சிலர் நிறைவேற்றினால் அனைவரின் மீதும் உள்ள கடமை நீங்கிவிடுதல் என்பதற்குச் சொல்லப்படும்.)

மய்யித்தைக் குளிப்பாட்டாதிருப்பது பாவமாகும். இறந்துவிட்ட மய்யித்தின் அருகில் சாம்பிராணி, பத்தி முதலியவற்றின் புகையைக் காண்பிக்க வேண்டும். காரணம், இறந்துவிட்ட மனிதனிலிருந்து நச்சுக் கிருமிகள் வெளியாகும் என்பதால். தீயநாற்றத்தை தடுப்பதற்குமாகும்.

PDF ISLAM

மய்யித்தின் அருகில், 'ஹைளு' நிபாஸ் வரும் பெண்கள் இருக்கக்கூடாது. மய்யித்தைக் காலதாமதம் செய்யாமல் விரைவாக அடக்கம் செய்ய முயற்சி செய்ய வேண்டும்.

மேலும், சக்ராத்தில் இருப்பவரிடம் கலிமா சொல்லுமாறு கட்டாயப்படுத்தக்கூடாது. ஒருவேளை அவர் கலிமா சொல்ல முடியாமல் இறந்துவிட்டால், மற்றவர்கள், அவர் கலிமாச் சொல்லாமல் இறந்துவிட்டாரே என்று தவறாக எண்ணும்படி ஆகிவிடும். ஒருக்கால் அவர் தம் மனத்திற்குள்ளாகவே சொல்லிக் கொண்டிருக்கலாம் அல்லவா?

சக்ராத்தில் இருப்பவர் ஒருமுறை கலிமா ஷஹாதத் கூறிவிட்டாலே போதுமானது. அவர் தேவையற்ற பேச்சுக்களைப் பேசுமுற்பட்டால் மீண்டும் அவருக்குக் கலிமா சொல்லிக் கொடுக்க வேண்டும்.

'அவரின் அருகில் அமர்ந்து யாசீன், சூரத்துர் ரஃது போன்றவற்றை ஓதுவது முஸ்தஹப் (விரும்பத்தக்க செயல்) ஆகும். இவைகளை ஓதுவதன் மூலம் அவரின் மரணவேதனை இலேசாகும் என ஹதீஸில் வந்துள்ளது,

சக்ராத்தில் இருந்தவர் இறந்துவிட்டால் அவரின் தாடையைக்கட்டி,

بِسْمِ اللّٰهِ وَعَلٰى مِلَّةِ رَسُوْلِ اللّٰهِ صَلَّى
اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمَ اَللّٰهُمَّ يَسِّرْ عَلَيْهِ
اَمْرَهُ وَسَهِّلْ عَلَيْهِ مَا بَعْدَهُ وَاَسْعِدْهُ
بِلِقَائِكَ وَاجْعَلْ مَا خَرَجَ اِلَيْهِ خَيْرًا مِمَّا خَرَجَ عَنْهُ

''பிஸ்மில்லாஹி வஅலாமில்லத்தி ரசூலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்

அல்லாஹும்ம எஸ்ஸிர் அலைஹி அம்ரஹு – வஸஹ்ஹில்

PDF ISLAM

அலைஹி மாபஃதஹு – வஅஸ்யித்ஹு பிலிகாயிக்க வஜ்அல் மாகரஜ இலைஹி கைரன் மிம்மா கரஜஅன்ஹு என்று ஓதி, இரு கண்களையும் கசக்கி மூடி, கட்டிலின் மீது கிடத்தியபின், தொப்புளுக்கும், முட்டுக் கால்களுக்கும் இடையில் துணியால் மறைத்து, உடுத்தியிருந்த துணியை அகற்றிய பிறகு, மய்யித்தைக் குளிப்பாட்டும் போது, அந்த இடத்தில் குளிப்பாட்டு பவரும், அவருக்குத் துணையாக இருப்பவரும் தவிர வேறு யாரும் இருக்கக் கூடாது.

மய்யித்தின் உரிமையாளன் குளிப்பாட்டுவது சுன்னத்தாகும். முஅத்தின் தான் குளிப்பாட்ட வேண்டும் என்று எண்ணுவது தவறாகும். இந்த எண்ணம் மார்க்கம் அறியாதவரின் எண்ணமாகும். உரிமையாளன் இல்லாவிடின் மார்க்கத்தில் பேணுதல் உள்ளவர் குளிப்பாட்டுவதே சிறப்பு!

குளிப்பாட்டியவுடன் தாமதிக்காமல் கஃபனிட்டுத் தூக்கிச் சென்று, தொழவைத்து அடக்கம் செய்துவிட வேண்டும். மேலும் கடைசி முறையாக தீதார் பார்த்தல் என்னும் பெயரால் அந்நியப் பெண்ணின் முகத்தை அந்நிய ஆடவர்களும், அந்நிய ஆணின் முகத்தை, அந்நியப் பெண்களும் பார்ப்பது மிகத்தவறான செயலாகும்.

மேலும் மய்யித்தை வைத்துக் கொண்டு, தெருவில் நிற்கும் முஸ்லிம் அல்லாதாருக்கும், முஸ்லிம் ஏழைகளுக்கும், அரிசி உப்பு, காசு போன்றவற்றைக் கொடுப்பது பித்அத்தான – அனாச்சார செயலாகும்.

ரொட்டியைச் சுட்டு, அதனை மய்யித்துடன் கப்றுக்குக் கொண்டு போய் பங்கிடுவதும் தவறாகும்.

PDF ISLAM

# குளிப்பாட்டும் முறை

மய்யித்தைக் குளிப்பாட்டுகின்றவர் தம் கையில் ஒரு துணியைச் சுற்றிக் கொண்டு, கண்களை மூடியவாறு மய்யித்தின் முன் துவாரம் பின் துவாரம் முதலியவற்றைத் தேய்த்துக் கழுவ வேண்டும். மய்யித்தின் வாயிலும், மூக்கிலும் தண்ணீர் விட்டுக் கழுவாமல் ஒளூச் செய்விக்க வேண்டும். (எனினும், ஹைளு, நிபாஸ் உள்ள பெண்கள், அல்லது ஜுனுபாளியானவர்கள் இறந்து விட்டால் மூக்கிற்கும், வாய்க்கும் நீர் செலுத்த வேண்டும்).

விரலில் துணியைச் சுற்றிக் கொண்டு மய்யித்தின் பற்களைத் தேய்த்துக் கழுவவேண்டும். மூக்கிலும் விரலால் துப்புரவு செய்ய வேண்டும். இலந்தை இலை போட்ட வெந்நீராலோ, இலை இல்லாவிட்டால் சுட வைத்த நீராலோ, மய்யித்தின் மீது ஊற்றி, தலை முடி முதலியவற்றைக் கித்மீர் என்னும் பூண்டு, அல்லது சவர்க்காரம் (சோப்) முதலியவற்றால் கழுவவேண்டும்.

மய்யித்தை இடப்பக்கம் சாய்த்துத் தண்ணீர் ஊற்றிக் கழுவிய பின்னர், வலப்பக்கம் சாய்த்து முன் போல் கழுவிய பிறகு, மய்யித்தைத் தூக்கி உட்கார வைத்து, சாய்த்து அணைத்தவாறு மய்யித்தின் வயிற்றை மெல்ல அழுத்த வேண்டும். பின் துவாரத்திலிருந்து அசுத்தம் வெளிப்பட்டால் கழுவ வேண்டும். அசுத்தம் வெளிப்பட்டதால் மீண்டும் குளிப்பாட்ட வேண்டியதில்லை.

# கஃபன் அணிவிக்கும் முறை

மய்யித்திற்கு கஃபன் அணிவித்தல் ஃபர்ளு சிஃபாயாவாகும். புதிய துணி கொண்டுதான் கஃபன் அணிவிக்க வேண்டும் என்பது கட்டாயமில்லை. தூய்மையான வெள்ளை ஆடையாலும் கஃபன் அணிவிக்கலாம். மிக விலை உயர்ந்த துணிகளையோ, மிக மட்டமான துணிகளையோ கஃபனுக்குப் பயன்படுத்தாமல், நடுத்தரமான துணிகளைக் கொண்டே கஃபனிட வேண்டும். ஆண்களுக்கு மூன்று துணிகளாலும், பெண்களுக்கு ஐந்து

PDF ISLAM

துணிகளாலும் கஃபனிடுவது சுன்னத்தாகும். ஆண்களுக்கு அடையவளைந்தான். சட்டை, உடுத்தாடை ஆக மூன்றுமாகும்.

அடைய வளைந்தான் உடுத்தாடையும், உச்சி தொடுத்து உள்ளங்கால் வரையும் இருக்க வேண்டும். முதலில் அடையவளைந்தானைக் கீழே விரித்து, அதன் மீது உடுத்தாடையை விரித்து மய்யித்துக்குச் சட்டையிட்டு, உடுத்தாடையின் மீது வைத்து, இடப்புறம் முதலாவதாகவும், வலப்புறம் இரண்டாவதாகவும் சுற்றி, அதே போல் அடைய வளைந்தானையும் சுற்ற வேண்டும்.

சட்டை என்பது மய்யித்தின் கழுத்திலிருந்து முழங்கால் வரை வரக்கூடிய ஆடையாகும். இதனை கழுத்தில் மட்டும் வெட்டி மார்பின் பக்கம் கிழித்துவிட வேண்டும்.

அடுத்து, பெண்களுக்குச் சட்டை, உடுத்தாடை, தலைக்கட்டு, அடைய வளைந்தான், மார்க்கட்டு ஆக, இவ்வைந்தும் ஆகும். முதலாவதாக, சட்டையை அணிவித்து, தலைமுடியை இருபகுதி களாக்கி, இரு தோள்களின் மேல் வைக்க வேண்டும். பின்னர் தலைக்கட்டை அணிவித்து, பிறகு உடுத்தாடையையும், பிறகு, அடையவளைந்தானையும் அணிவிக்க வேண்டும்.

# ஜனாஸாத் தொழுகை!

ஜனாஸா தொழுகை, ஃபர்ளுகிஃபாயாவாகும். அதனை ஒருவர் நிறைவேற்றிவிட்டாலும் அனைவரின் மீதும் உள்ள கடமை நீங்கிவிடும். ஒருவர் கூட நிறைவேற்றவில்லை என்றால் அனைவரும் குற்றவாளிகள் ஆவர். அத்தொழுகைக்கு ருகூவு, சுஜூதுகள் கிடையாது. அத்தொழுகை நான்கு தக்பீர்களைக் கொண்டதாகும்.

ஒவ்வொரு தக்பீரும் ஒரு ரகஅத்தின் இடத்தில் (அந்தஸ்த்தில்) உள்ளதாகும். நாம் மய்யித்தைத் தொழவில்லை, மய்யித்திற்காக துஆச் செய்கின்றோம். ஜனாஸா தொழுகையில் முதல் தக்பீரில் மட்டும் இருகைகளையும் காது வரை உயர்த்த வேண்டும். ஷாபியீ மத்ஹபைச் சேர்ந்த இமாமைத் தொடர்ந்திடும் ஒரு ஹனஃபீக்காரர் எல்லா தக்பீர்களிலும் கைகளை உயர்த்துவது சிறப்பாகும்.

PDF ISLAM

## அதன் நிபந்தனைகள் எட்டு!

1. மய்யித்து முஸ்லிமாக இருத்தல்.

2. அது (குளிப்பாட்டப்பட்டுத்) துப்புரவாயிருத்தல்.

3. ஜனாஸா (மக்களுக்கு) முன்னால் இருத்தல்.

4. அதைப் பெட்டியுடன் தரையில் வைத்தல்.

5. இமாம் பருவம் எய்தியவராயிருத்தல்.

6. இமாம் மய்யித்தின் நெஞ்சுக்கு நேராயிருத்தல்.

7. மய்யித்து முன்னால் இருத்தல்.

8. இமாமும், மஃமூம்களும், ஜனாஸாவும் மறைவிடங்களை (மர்மஸ்தானங்களை) மறைத்திருத்தல். முஸ்லிமல்லாத மய்யித்திற்கும். குளிப்பாட்டப்படாத மய்யித்திற்கு ஜனாஸாத் தொழுகை நடத்தக் கூடாது.

ஹாலிரில்லாத காயிப்ஜனாஸா தொழுகை ஹனஃபிகளுக்குக் கூடாது. எனினும், ஒரு ஷாஃபியீ இமாம் அவரைத் தொடர்ந்து தொழலாம். *மதாரிஜுன் நுபுவ்வத்*

## ஜனாஸா தொழுகையை நிறைவேற்றும் முறை

உஸல்லீ லில்லாஹி தஆலா தாயியன் லில்மய்யித்தி, ''இந்த மய்யித்துக்கு துஆச் செய்யக் கூடியவனாக அல்லாஹ்விற்காகத் தொழுகின்றேன்.'' என்று இமாமும்,

أُصَلِّي لِلّٰهِ تَعَالٰى دَاعِيًا لِلْمَيِّتِ مَعَ الْإِمَامِ

''உஸல்லி லில்லாஹி தஆலா தாபியின் லில்மய்யித்தி மஅல் இமாமி''

''இந்த மய்யித்துக்கு துஆச் செய்தவனாக, இந்த இமாமுடன் அல்லாஹ்விற்காகத் தொழுகின்றேன்,'' என முக்ததீகளும் கூறி

PDF ISLAM

முதல் தக்பீர் கட்டிக் கொள்ள வேண்டும். முதல் தக்பீர் கட்டியபின் இமாமும், முக்ததீகளும்,

سُبْحَانَكَ اللّٰهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ وَتَعَالٰى جَدُّكَ وَلَآ اِلٰهَ غَيْرُكَ

சுப்ஹான கல்லாஹும்ம வபிஹம்திக்க, வதபாரகஸ்முக்க வத்தஆலாஜத்துக்க வஜல்ல ஸனாவுக்க வலாயிலாஹ கைருக்க!

என்று ஓதியபின், இமாம் இரண்டாம் முறையாக அல்லாஹு அக்பர் என்று கூறுவார். முக்ததீகளும் கைகளை அவிழ்க்காமலும், தலையை உயர்த்தாமலும், அல்லாஹு அக்பர், எனக் கூற வேண்டும். அதன் பின் இமாமும், முக்ததீகளும் ஸலவாத்து ஓத வேண்டும். அது வருமாறு.

اَللّٰهُمَّ صَلِّ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ اَللّٰهُمَّ بَارِكْ عَلٰى مُحَمَّدٍ وَّعَلٰى اٰلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلٰى اِبْرَاهِيْمَ وَعَلٰى اٰلِ اِبْرَاهِيْمَ اِنَّكَ حَمِيْدٌ مَّجِيْدٌ.

அல்லாஹும்ம ஸல்லி அலா முஹம்மதின் – வஅலா ஆலி முஹம்மதின் கமா – ஸல்லைத்த அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம இன்னக்க ஹமீதும் மஜீத்.

அல்லாஹும்ம பாரிக் அலா முஹம்மதின் வஅலா ஆலி முஹம்மதின் – கமா பாரக்த அலா இப்றாஹீம வஅலா ஆலி இப்றாஹீம ஃபில் ஆலமீன இன்னக்க ஹமீதும் மஜீத்.

மூன்றாம் தக்பீருக்குப் பின் இமாமும், முக்ததீகளும் கீழ்க்காணும் துஆவை ஓத வேண்டும்.

PDF ISLAM

اَللّٰهُمَّ اغْفِرْ لِحَيِّنَا وَمَيِّتِنَا وَشَاهِدِنَا وَغَائِبِنَا
وَصَغِيْرِنَا وَكَبِيْرِنَا وَذَكَرِنَا وَاُنْثَانَا اَللّٰهُمَّ
مَنْ اَحْيَيْتَهُ مِنَّا فَاَحْيِهِ عَلَى الْاِسْلَامِ وَمَنْ
تَوَفَّيْتَهُ مِنَّا فَتَوَفَّهُ عَلَى الْاِيْمَانِ

அல்லாஹும்ம மஃபிர்லிஹய்யினா – வமய்யித்தினா – வஷாஹிதினா – வகாயி பினா – வஸகீரினா வகபீரினா – வதஜரினா வஉன்ஸானா – அல்லாஹும்மன் அஹ்யைத்தஹு மின்னா ஃபஅஹ்யிஹி அலல் இஸ்லாம் வமன்தவஃப் ஃபைத்தஹு மின்னா ஃபதவ ஃப்பஹு அலல் ஈமான்.

என்று ஓத வேண்டும். மய்யித்து பருவமாகாத சிறுவனாயிருந்தால்,

اَللّٰهُمَّ اجْعَلْهُ لَنَا فَرَطًا وَّاجْعَلْهُ لَنَا اَجْرًا
وَّذُخْرًا وَّاجْعَلْهُ لَنَا شَافِعًا وَّمُشَفَّعًا

அல்லாஹும் மஜ்அல்ஹுலனா ஃபரதன் – வஜ்அல்ஹுலனா அஜ்ரன் – வதுக்ரன் – வஜஅல்ஹுலனா ஷாபி அன் – வமுஷஃப்பஆ. என்று ஓத வேண்டும் மய்யித்துச் சிறுமியாக இருப்பின்,

اَللّٰهُمَّ اجْعَلْهَا لَنَا فَرَطًا وَّاجْعَلْهَا لَنَا
اَجْرًا وَّذُخْرًا وَّاجْعَلْهَا لَنَا شَافِعَةً وَّمُشَفَّعَةً

என்றும் ஓத வேண்டும்

PDF ISLAM

நான்காம் தக்பீருக்குப் பின்,

رَبَّنَآ اٰتِنَا فِى الدُّنْيَا حَسَنَةً وَّفِى الْاٰخِرَةِ حَسَنَةً وَّقِنَا عَذَابَ النَّارِ ○

“ரப்பனா ஆத்தினாஃபித்துன்யா ஹஸனத்தன் வஃபில் ஆகிரத்தி ஹஸனத்தன் வகினா அதாபன்னார்” எனும் துஆவை ஓதி சலாம் கொடுக்க வேண்டும். இவை யாவும் தொழுகையின் சுன்னத்துகளாகும். நான்கு தக்பீர்கள் மட்டுமே ஃபர்ளாகும்.

அடுத்து, ஓரிரு தக்பீருக்குப்பின் ஜனாஸாவில் கலந்து கொண்டவன் ஈடுபட்ட தக்பீர்களைக் கூறிக் கொள்ள வேண்டும்.

# ஜனாஸாத் தொழுகை தொழவைக்கத் தகுதியானவர்கள்

ஜனாஸாவை, அம்மய்யித்தின் வலீகாரனாகிய உரிமையாளனே தொழவைக்க முதல் தகுதி படைத்தவனாவான். பின்னர் பள்ளியின் இமாம். மய்யித்தை வேறு எவராவது தொழவைக்க விரும்பினால் மய்யித்தின் உரிமையாளன் அனுமதி கொடுக்க வேண்டும். உரிமையாளனின் அனுமதியின்றி வேறொருவர் தொழ வைப்பதை உரிமையாளன் விரும்பாவிட்டால், மீண்டும் இன்னொருவருக்கு உரிமையாளன் அனுமதி வழங்கித் தொழவைக்கச் சொல்லலாம்.

பள்ளிவாசலின் உட்பகுதியில் ஜனாஸா தொழ வைப்பது மக்ரூஹ் ஆகும்.

ஒரு முஸ்லிமின் ஜனாஸாவைத் தொழ வைக்கப்படாமல் அடக்கம் செய்யப்பட்டு விட்டால் அஃது ஊதிவெடிப்பதற்குள் அவரை அடக்கப்பட்ட இடத்திலேயே இத்தொழுகை நிறைவேற்றப்பட வேண்டும்.

மேலும் மார்க்கத்திற்காகப் போரிட்டு இறந்தவர்களைக் குளிப்பாட்ட வேண்டியதில்லை. அவர்கள் அந்த இரத்தக் கறையுடனேயே شَهِيْد தியாகி எனும் பெயரில் மறுமையில்

எழுப்பப்படுவர். இரத்தம் தோய்ந்த உடையுடனேயே அடக்கம் செய்ய வேண்டும்.

அவர் அணிந்திருந்த ஆடை கஃபனுக்கு போது மானதாயிருந் தால் அதனையே கஃபனாக்கிக் கொள்ள வேண்டும். போதவில்லை யாயின் தேவைப் பட்ட அளவிற்கு வேறு துணிகளை இணைத்துக் கொள்ள வேண்டும். கஃபனுக்கு மேல் அதிகமாகயிருந்தால், அதிகமானதை அகற்றி விட வேண்டும்.

# ஜனாஸாவைத் தூக்கிச் செல்லுதல்!

ஜனாஸாவைத் தூக்கிச் செல்லும் போது அதன் தலைப்பாகத்தை முற்படுத்தவேண்டும்.

فِي حَالَةِ الْمَشْيِ بِالْجَنَازَةِ يُقَدَّمُ الرَّأْسُ

*பதாவா ஆலம்கீரி*

ஜனாஸாவைத் தூக்கிச் செல்லும் போது விரைவாக ஓடாமலும், மிகமெல்ல நடக்காமலும், நடுத்தர நடையுடன் செல்லவேண்டும். அதனைத் தொடர்ந்து செல்பவர்கள், உலகப்பேச்சுக்களைப் பேசாமல் தஸ்பீஹ், திக்ருகளை மெல்ல ஓதிச் செல்ல வேண்டும். பைத்து பாட்டு முதலியவற்றைக் கூறிக் கொண்டு செல்வது மக்ரூஹ் ஆகும். ஜனாஸாவைக் கீழே வைப்பதற்கு முன் அமர்வது மக்ரூஹ் ஆகும். *காரிகான்*

ஜனாஸாவிற்குப் பின்னே பேசிக் கொண்டு போவது மரணத்தைப் பற்றிய அச்சம் இல்லாத செயலாகும். இறந்து விட்டவரின் குற்றங்களை எடுத்துரைப் பது குற்றமாகும். "ஒரு மனிதர் இறந்து விட்டால், அவரின் குற்றங்குறைகளைப் பேசாதீர்கள்; அவரின் நற்செயலை எடுத்துக் கூறுங்கள்" என்று நபி (ஸல்) அவர்கள் கூறியுள்ளார்கள்.

மக்கள், ஜனாஸாவிற்கு முன்னே செல்லாமல் பின்னே செல்ல வேண்டும். (ஜனாஸாவிற்கு முன்னே செல்வது ஷாபியீ மத்ஹபில் முஸ்தஹப் (சிறந்தது).

PDF ISLAM

# அஸ்ஸலாத்துல் ஜனாஸா ஷாபியீ

## ஜனாஸா தொழுகையின் ஃபர்ளுகள் ஏழு?

1. நிய்யத்து:

أُصَلِّي الْفَرْضَ هٰذَا الْمَيِّتِ اَرْبَعَ تَكْبِيْرَاتٍ
لِلّٰهِ تَعَالٰى اَللّٰهُ اَكْبَرُ

உஸல்லியல் ஃபர்ள ஹாZதல் மய்யித்தீ அர்பஅ தக்பீராத்தின் லில்லாஹி தஆலா அல்லாஹு அக்பர்.

2. நின்று தொழுவதற்கு சக்தி பெற்றவன் நின்று தொழுதல்.

3. முதல் தக்பீருடன் நான்கு தக்பீர்கள் சொல்லுதல்.

4. முதல் தக்பீர் கட்டியபின் சூரத்துல் ஃபாத்திஹா ஓதுதல்.

5. இரண்டாம் தக்பீர் கட்டியதும் ஸலவாத்து ஓதுதல்.

6. மூன்றாம் தக்பீருக்குப் பின் மய்யித்திற்காக துஆச் செய்தல். அது குழந்தையாயினும்,

اَللّٰهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَاعْفُ عَنْهُ وَعَافِهِ

அல்லாஹும்ம மஃபிர்லஹு வர்ஹம்ஹு வஃபு அன்ஹு வஆஃபிஹி.

7. நான்காம் தக்பீருக்குப் பின் சலாம் கொடுப்பது. சலாம் கொடுப்பதற்குமுன்,

اَللّٰهُمَّ لَا تَحْرِمْنَا اَجْرَهُ وَلَا تَفْتِنَّا
بَعْدَهُ وَاغْفِرْ لَنَا وَلَهُ

அல்லாஹும்ம லாதஹ்ரிம்னா அஜ்ரஹு. வலா தஃப்தின்னா பஃதஹு வஃபிர்லனா வலஹு.

இறந்தது குழந்தையாயிருந்தால். கீழ்க்காணும் துஆவையும் ஓதலாம்.

اَللّٰهُمَّ اجْعَلْهُ فَرَطًا لِاَبَوَيْهِ وَسَلَفًا

وَذُخْرًا وَعِظَةً وَاعْتِبَارًا وَشَفِيْعًا

وَثَقِّلْ بِهٖ مَوَازِيْنَهُمَا وَاَفْرِغِ الصَّبْرَ عَلٰى

قُلُوْبِهِمَا وَلَا تَفْتِنْهُمَا بَعْدَهٗ وَلَا تَحْرِمْهُمَا اَجْرَهٗ

அல்லாஹும்மஜ்அல்ஹுஃபரத்தன் – லிஅபவைஹி – வஸலபன் வதுக்ரன். வஇளத்தன். வஉத்திபாரன் வஷபீஅன் வஸக்கில் பிஹி. மவாஜீனஹுமா வஅப்ரிஸ்ஸப்ர அலாகுலூபிஹிமா வலாதப்ஃதின்ன ஹுமா, பஃதஹு வலா தம்ரிஹ்ஹுமா அஜ்ரஹு.

# அடக்கம் செய்தல்

மய்யித்தை அடக்கம் செய்வதற்குக் கப்று வெட்டுவதாயின் பூமி மிகெகட்டியானது என உணர்ந்தால். லிஹ்து என்னும் பிள்ளைக் குழித் தோண்ட வேண்டும். 'லிஹ்து என்பது ஒரு பெரிய குழிதோண்டி மய்யித்தை உள்ளே வைக்கும் அளவிற்குக் கிப்லாப் பக்கம் ஒரு பிள்ளைக்குழி தோண்ட வேண்டும்.

பூமி இரசலாக இருந்தால் شَقٌّ ஒற்றைக் குழி பெரிதாகத் தோண்டி, நடுவில் மய்யித்தின் அகலத்திற்கும், நீளத்திற்கும் சரியாகத் தோண்ட வேண்டும். குழியை இடுப்பளவுக்கோ, நெஞ்சின் அளவிற்கோ, அல்லது ஓர்ஆள் உயரமோ தோண்ட வேண்டும். ஓர் ஆள் உயரம் தோண்டப்படுவது மிக்க நலமாகும்.

ஆனால், பூமி மிகவும் மணற்பாங்காகவும், இரசலாகவும் இருப்பின், மய்யித்தைப் பெட்டகத்துடன் வைப்பது தவறல்ல. மய்யித்தைக் 'கிப்லா' பக்கமாக புகுத வைக்க வேண்டும்.

PDF ISLAM

மய்யித்தைக் குழியில் வைக்கும் போது,

بِسْمِ اللّٰهِ وَعَلٰى مِلَّةِ رَسُوْلِ اللّٰهِ صَلَّى اللّٰهُ عَلَيْهِ وَسَلَّمْ

பிஸ்மில்லாஹி வஅலா மில்லத்தி ரஸூலில்லாஹி ஸல்லல் லாஹு அலைஹிவஸல்லம்'' என்று சொல்லி வைத்து, கஃபன் முடிச்சுகளை அவிழ்த்து, மூங்கில் பட்டைகளையோ, குச்சிகளையோ குழியில் பரத்தி வைத்து மய்யித்தை மறைத்து அடக்க வேண்டும்.

பெண் மய்யித்தை அடக்கும் போது மேலே திரைபிடித்து அடக்க வேண்டும்.

கடுமழையோ, பணியோ, கடும் வெயிலோ இருப்பின், ஆண் மய்யித்துக்கும் திரைபிடித்துக் கொள்ளலாம்.

கப்ரில் மண்ணைத் தள்ளும் போது, மூன்று பிடிமண்ணை எடுத்துப் போட வேண்டும். முதல் பிடி மண்ணைப் போடும் போது,

مِنْهَا خَلَقْنٰكُمْ

''மின்ஹா கலக்னாக்கும்'' நாம் உங்களை இம் மண்ணிலிருந்தே படைத்தோம். இரண்டாம் பிடி மண்ணைப் போடும்போது,

وَفِيْهَا نُعِيْدُكُمْ

''வஃபீஹா நுயீதுக்கும்'' அதிலேயே (மண்ணறையிலேயே) உங்களை மீளவைப்போம்.

மூன்றாம்பிடி மண்ணைப் போடும்போது,

وَمِنْهَا نُخْرِجُكُمْ تَارَةً اُخْرٰى

''வமின்ஹா நுக்ரிஜுக்கும் தாரத்தன் உக்ரா''

மேலும், அதிலிருந்தே மீண்டும் உங்களை வெளியாக்குவோம்

PDF ISLAM

எனக் கூற வேண்டும். பிடி மண் போடுவது முஸ்தஹப் என்னும் விரும்பத்தக்கதாகும்.

அடக்கியபின் கப்ரைக் குவியலாக்க வேண்டும். அதன்மீது தண்ணீர் ஊற்றுவது விரும்பத்தக்கது. காரணம் கப்ரு கெட்டியாக இருப்பதற்காகும். பின்னர் துஆ ஓத வேண்டும். அதன் பின், மய்யித்தின் உரிமையாளருக்குக் கைகொடுத்து,

أَعْظَمَ اللّٰهُ أَجْرَكَ وَأَحْسَنَ عَزَاءَكَ
وَغَفَرَ لِمَيِّتِكَ

''அஃளமல்லாஹு அஜ்ரக வஅஹ்ஸன **அ**ஸாஅக வகஃபர லிமய்யித்திக'' என்று கூறி ஆறுதல் கூற வேண்டும். அடுத்து, மய்யித்து விட்டாருக்கு அவர்களின் நெருங்கிய உறவினர்களோ, அண்டை வீட்டாரோ உணவு சமைத்துக் கொடுக்க வேண்டும். மய்யித்து வீட்டில் விருந்து வைப்பது பித்அத்தான செயலாகும்.

அடுத்து அடக்கம் செய்த நாளிலிருந்து ஏழு நாட்கள் வரையும், தம்மால் இயன்ற அளவிற்கு மய்யித்தின் பெயரால், ஏழை எளியோர்க்கு சதகா செய்வது சிறப்பாகும். இயலாதவர்கள் நஃபில் தொழுகைகளைத் தொழுது அதன் நன்மைகளை மய்யித்திற்குச் சேர்த்து வைக்கலாம்.

மக்கள் நிந்திப்பார்கள், கேலி செய்வார்கள் எனக் கருதி கடன்பட்டோ, வட்டிக்குப் பணம் பெற்றோ மய்யித்திற்கு சதகா செய்ய வேண்டியதில்லை; அஃது தவறாகும். வட்டிக்குப் பணம் வாங்கி ஃபாத்திஹா செய்வது ஹராமாகும்.

## மய்யித் சம்பந்தமான கேள்வி - பதில்கள்

கேள்வி: மய்யித்தை அடக்கம் செய்தபின் வீட்டிற்கு வந்து வீட்டின் முன் நின்று துஆச் செய்ய வேண்டுமா?

PDF ISLAM

பதில்: மய்யித்தை அடக்கம் செய்த பின்னர் கப்ருஸ்தானிலேயே துஆ ஓதப்பட்டு விடுகின்றது. வீட்டிற்கு வந்து ஓதுவதெல்லாம் ஷரீ அத்தில் உள்ளதல்ல; வழக்கத்தில் உள்ள செய்யலாகும்.

கேள்வி: மூன்றாம் நாள் ஜியாரத் செய்யலாமா? ஏழாம் நாள், பத்தாம் நாள், நாற்பதாம் நாள் என்று நான் குறிப்பிட்டு ஃபாத்திஹா ஓதலாமா?

பதில்: ஜியாரத் செய்வது என்பது மார்க்கத்தில் அனுமதிக்கப் பட்டுள்ளது. மூன்றாம் நாள் ஜியாரத் என்பது மார்க்கத்தில் இல்லாத ஒரு செயல். நாள் குறிப்பிட்டு ஃபாத்திஹா ஓதுவது பித்அத்தான ஒரு செயலாகும். பாத்திஹாவிற்கு நேரம், காலம், நாள் என்பதெல்லாம் கிடையாது. வருட ஃபாத்திஹா ஆறு மாத ஃபாத் திஹா, என்பதெல்லாம் நாமே ஏற்படுத்திக் கொண்டவையாகும்.

அத்தாவையும், அம்மாவையும் ஆறு மாதங்களுக்கு ஒரு முறையோ, ஆண்டிற்கு ஒரு முறையோ தான் நினைவு கூர வேண்டும் என்று மார்க்கம் சொல்லவில்லை. நன்றியுள்ளவர்கள் எந்தநேரமும் நினைவு கூர்ந்து அவர்களுக்காகத் துஆச்செய்யலாம். நாம் ஒவ்வொரு தொழுகையிலும்,

اَللّٰهُمَّ اغْفِرْ لِيْ وَلِوَالِدَيَّ

"அல்லாஹும் மஃ பிர்லீ வலிவாலிதைய,

"என்னுடைய இறைவா! என்னுடையவும், பெற்றோர்களுடை யவும், எனது ஆசானுடையவும், முஃமினான ஆண் பெண்கள், முஸ்லிமான ஆண் பெண்களுடையவும், அவர்களில் உயிருடன் இருப்போர், மரணமடைந்து விட்டவர்களின் பாவங்களையும் மன்னித்தருள்வாயாக!" என இறைஞ்சுகின்றோமே, இதைவிடச் சிறந்தது வேறு என்ன இருக்க முடியும்? வெளியில் கேட்கும் துஆவைவிட, தொழுகையிலேயே கேட்கப்படுகின்ற துஆ எத்தனைச் சிறப்பு வாய்ந்தது என்பதை அறிந்து கொள்ளுங்கள்!

PDF ISLAM

கேள்வி: கூலி கொடுத்துக் குர்ஆன் ஓதலாமா?

பதில்: ஓதத்தெரிந்தவர் தாமே குர்ஆன் ஓதுவதுதான் நன்மையளிப்பதாகும். பிறருக்குக் கூலி கொடுத்து குர்ஆன் ஓதச் சொன்னால், அதற்கு நன்மை கிடைக்காது. நமக்கு குர்ஆன் ஓதத் தெரியாவிட்டால் ஓதத் தெரிந்தவரை ஓதச் சொல்லலாம். அதற்குக் கூலிவாங்குவது நன்மையளிக்கும் செயலல்ல என்பதே ஹதீஸின் கருத்தாகும். மனிதாபிமான அடிப்படையில் கூலி வழங்கப்படு கின்றது. இவ்வளவுதான் கொடுக்க வேண்டும் என்று மார்க்கத்தில் எந்த வரையறையும் கிடையாது; கட்டாயப்படுத்தியும் கேட்கக் கூடாது. நடை முறையில் உள்ள 11–25, 1–25என்பனவெல்லாம் லெப்பைகள் ஏற்படுத்திக் கொண்டவையாகும்.

கேள்வி: இறந்தவர்கள் வீட்டில் பெருநாள் கொண்டாடாமல் இருப்பதும், புதிய துணி மணிகள் அணியாதிருப்பதும் திருமணம் போன்ற நற்காரியங்கள் நடத்தாதிருப்பதும் முறையாகுமா?

பதில்: துக்கம் என்பதே மூன்று நாட்கள் வரைதான். அதற்குமேல் துக்கம் மேற்கொள்வது மார்க்கம் அனுமதிக்காத ஒன்றாகும்.

நாற்பது நாட்கள் வரை முடிவெட்டாமலும், முகச்சவரம் செய்து கொள்ளாமலும் இருப்பது பிறமத வழக்கமாகும். இச்செயல்கள் மார்க்கத்தை அவமதிப்பதாகும்.

புத்தாடைகள் – அணிவதோ திருமணம் போன்ற நற்காரியங்கள் செய்வதோ – மார்க்கத்தில் தடை செய்யப்படவில்லை; மார்க்கம் அறியாத அறிவிலிகளே இவ்வாறு நடந்து கொள்வர். தம் மனைவி இறந்து விட்ட மறு நாளே மறுமணம் செய்து கொண்ட ஒரு சஹாபியின் வரலாறு உண்டு!

## கப்ரு ஜியாரத்!

கப்ருகளை ஜியாரத்து செய்வது சுன்னத்தாகும். பெண்களுக்கு சுன்னத்தில்லை.

PDF ISLAM

இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள், நபி (ஸல்) அவர்கள் கூறியதாக அறிவிக்கின்றார்கள். "கப்ருகளை ஜியாரத்து செய்கின்ற பெண் களையும், கப்ருகளில் விளக்கேற்றி வைப்பவர்களையும், கப்ருகளைத் தொழும் இடங்களாக ஆக்கிக் கொள்பவர்களையும் ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லம் அவர்கள் சபித்தார்கள்." *அபூதாவூத் – நஸயீ*

ஜியாரத்திற்குச் சிறந்த நாள் வெள்ளிக்கிழமை, சனிக்கிழமை, திங்கட்கிழமை, வியாழக்கிழமை ஆகிய நாட்களாகும். மேலும், பரா அத்இரவிலும், இருபெருநாட்களின் இரவிலும், அரஃபாநாள் இரவிலும் ஜியாரத் செய்வது சிறந்ததாகும்.

# ஜியாரத்தின் ஒழுங்குகள்

கப்ரை ஜியாரத்துச் செய்பவர்கள். கப்ரிடத்தில் கால் மாட்டுப்புறமாக நின்று, கிப்லாவைப் பின்னோக்கி, மய்யித்துடைய முகத்தை முன்னோக்கியவராக,

اَلسَّلَامُ عَلَيْكُمْ دَارَ قَوْمٍ مُؤْمِنِيْنَ وَاِنَّا
اِنْ شَاءَ اللّٰهُ بِكُمْ لَاحِقُوْنَ ـ وَنَسْأَلُ اللّٰهَ
لَنَا وَلَكُمُ الْعَافِيَةَ

அஸ்ஸலாமு அலைக்கும் தாரகவ்மிம் முஃமினீனவஇன்னா இன்ஷா அல்லாஹுபிக்கும் லாஹிகூன். வநஸ்அலுல்லாஹலனா வலக்குமுல் ஆஃபியா.

பொருள்: "முஃமினாவர்களின் வீடே! உங்களின் மீது (இறைவனின்) சாந்தியுண்டாவதாக! நிச்சயமாக நாங்களும் (அல்லாஹ் நாடினால்) உங்களுடன் (வந்து) சேரக்கூடியவர்களே! இன்னும் அல்லாஹ்விடத்தில் உங்களுக்கும், எங்களுக்கும் நலத்தைக் கேட்கின்றோம்."

என்று துஆக் கேட்க வேண்டும். கப்ரடியில் இருந்திடும் போது, அம்மய்யித்து உயிர் வாழ்ந்த காலத்தில் எம்முறையில் கண்ணியமு

டன் நடந்து கொண்டோமோ அவ்வாறே கண்ணியத்துடன் நடந்து கொள்ள வேண்டும். ஜியாரத்துச் செய்பவர் சூரா யாசீன் ஒதுவது முஸ்தஹபு ஆகும்.

மய்யித்தின் முகத்தை முன்னோக்கி நிற்க வசதியில்லை யென்றால், தலைமாட்டிலோ, கால் மாட்டின் புறமோ நிற்பது கூடும். அது சமயம் அல்ஹம்து, குல்ஹுவல்லாஹு அஹத் மூன்று விடுத்தம் ஓதவேண்டும், பன்னிரெண்டு முறை ஓதினால் மிகவும் சிறப்பாகும். பிறகு துஆ ஒத வேண்டும்.

اَللّٰهُمَّ اغْفِرْ لَهُ وَارْحَمْهُ وَاحْشُرْهُ
وَإِيَّانَا فِي زُمْرَةِ الصَّالِحِيْنَ وَأَوْصِلْ
ثَوَابَ مَاقَرَأْنَاهُ بِرَحْمَتِكَ يَاأَرْحَمَ الرَّاحِمِيْنَ

அல்லாஹும் மஃபிர்லஹு – வர்ஹம்ஹு – வஹ்ஷுர்ஹு வஇய்யானா ஃபீ ஜும்ரத்திஸ் ஸாலிஹுன் – வஅவ்ஸில் ஸவாப மாகரஃனாஹு பிரஹ்மத்திக்க யாஅர்ராஹிமீன்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள், "கப்ரில் ஒருமய்யித்தின் நிலை எவ்வாறு இருக்குமென்றால், தண்ணீரில் மூழ்கித் தத்தளித் துக் கொண்டிருப் பவன் தன்னைக் காப்பாற்ற ஆள் இல்லாது தவிப்பவனின் நிலையினைப் போன்றதாகும். மேலும், அந்த மய்யித்து, அவனின் தந்தை, அல்லது அவனின் உடன் பிறந்தான், அவனின் நண்பர்போன்றவர்களின் துஆவை எதிர்பார்த்த வண்ணமிருப்பான்.

அந்தத் துஆ மரணித்து விட்ட அம்மனிதனுக்குப் போய்ச் சேருமாயின், அஃது அவனுக்கு இவ்வுலகையும், இவ்வுலகிலுள்ள பொருள்கள் யாவற்றையும் விட மிக்க ஏற்றமானதாகவும், உவப்பானதாகவும் இருக்கும்" எனக் கூறினார்கள்.

மேலும் கூறினார்கள்: "ஒருவன் தன் தாய் தந்தையரின் அல்லது அவர்களில் ஒருவருடைய கப்ரை ஒவ்வொரு ஜும்ஆவின் போதும்

PDF ISLAM

ஜியாரத்துச் செய்து வருவானாயின், அவன் செய்த பிழைகள் மன்னிக்கப்பட்டு நன்றியுடையோரின் பட்டியலில் எழுதப்படும்!

மேலும் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். "ஒருவனின் தாய் தந்தையர்" அவன் மீது மனவருத்தத்துடன் இறந்துவிடுவார்களா யின், அவன் அவர்களுக்காக துஆ இறைஞ்சினால், அவர்களுக்கு அவன் நன்றி செய்தவனாக அல்லாஹ் எழுதுவான்.

# கப்ராளிகளுக்கு நன்மை எத்திவைத்தல்!

இப்னு அபீஷைபா (ரஹ்) அவர்கள், ஹஸன் (ரலி) அவர்கள் வாயிலாக அறிவிக்கின்றார்கள்: எவனொருவன் கப்ருஸ்தானுக்குச் சென்று,

اَللّٰهُمَّ رَبَّ الْاَجْسَادِ الْبَالِيَةِ وَالْعِظَامِ
النَّخِرَةِ الَّذِىْ خَرَجَتْ مِنَ الدُّنْيَا وَهِىَ
بِكَ مُؤْمِنَةٌ اَدْخِلْ عَلَيْهَا رَوْحًا مِنْ
عِنْدِكَ وَسَلَامًا مِنِّىْ

அல்லாஹும்ம ரப்பல் அஜ்ஸாதில் பாலியத்தி – வல் இளாமின்னக்ரத்தி – அல்லத்தீகரஜத் மினத்துன்யா – வஹிய பிக்க முஃமினத்துன் அத்கில் அலைஹாரவ்–ஹன் மின் இன்திக்க வஸலாமன்மின்னீ என்று ஓதுவானாயின் ஆதம் அலைஸ்ஸலாம் அவர்கள் தொடுத்து. முஃமினான நல்லடியார்கள் அனைவரும் இவன் பொருட்டுப் பாவமன்னிப்புக் கோருவார்கள்!

இப்னு அபித்துன்யாவின் அறிவிப்பில், ஆதம் அலைஸ்ஸலாம் அவர்கள் முதல், மௌத்தானவர்களின் எண்ணிக்கையளவு நன்மைகள் எழுதப்படும்."

PDF ISLAM

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள், "ஒருவன் கப்ருஸ்தானுக்குச் சென்று, சூரத்துல் ஃபாத்திஹா, குல்ஹுவல்லாஹு அஹத், அல்ஹாக்கு முத்தகாசுர் போன்ற சூராக்களை ஓதி அதன் நன்மைகளை அவர்களுக்குச் சேர்த்து வைப்பானாயின், மறுமையில் அவர்கள் இவனுக்காக இறைவனிடம் மன்றாடுவார்கள். *ஹிகாயத்: இஸ்லஸுத்தீன்*

இப்னு அப்துஸ்ஸலாம் எனும் பெரியார், "மய்யித்திற்கு ஓதப்படும் குர்ஆன், துஆ முதலியவை அம்மய்யித்திற்குப் போய்ச் சேருவதில்லை" எனப்ஃபத்வா கொடுப்பவராயிருந்தார். அவரின் மரணத்திற்குப்பின் ஒருவர் அவரைக் கனவில் கண்டு, "தாங்கள் மய்யித்திற்கு எந்த நன்மையும் சேருவதில்லை! எனக்கூறிக் கொண்டிருந்தீர்களே! இப்பொழுது உங்கள் நிலை என்ன?" எனக் கேட்ட போது,

"நான் உலகில் அவ்வாறு சொல்லிக் கொண்டிருந்தேன்; இங்குவந்த பின்னர் இச்சொல்லைவிட்டும் நீங்கி விட்டேன்; எனக்கு நன்மைகள் வந்து சேர்ந்து கொண்டிருக்கின்றன" என்றார்.

இறந்தவர்களுக்காக உயிருடனிப்பவர்கள் குர்ஆன் ஓதி, அதன் நன்மையை எத்திவைப்பதற்கு 'ஈஸாலே தவாப்' எனக்கூறப்படும். மேற்கூறிய நிகழ்ச்சியில் காணப்படும் அறிஞர் இஸ்ஸுத்தீன் இப்னு அப்துஸ் ஸலாம் என்பவரும், இக்காலத்தில் உள்ள சிலரும் மய்யித்திற்காக ஓதப்படும் குர்ஆனின் நன்மைகள் மய்யித்திற்குப் போய்ச் சேருவதில்லை, எனக்கூறுகின்றனர்.

ஆனால், ஹன்பலி மத்ஹபைச் சேர்ந்த அறிஞர்களுள் ஒருவராக மதிக்கப்படும் இப்னு குதாமா (ரஹ்) அவர்கள் مغني மங்னானி என்னும் நூலில் (கிதாபில்) கூறுகின்றார்கள்.

"இறந்து விட்டவர் எல்லா அமல்களைக் கொண்டும் பயன் பெறுகின்றார். குர்ஆன் ஓதுவதும், அவற்றைச் சார்ந்ததே! ஒரு மனிதன் செய்யும் எந்த நற்செயலும், வணக்கமும், அதனுடைய கூலியை இறந்து விட்டவருக்கு, அவன் சேர்த்து வைப்பானாயின்

PDF ISLAM

அல்லாஹ்வின் நாட்டப்படி (மரணித்தவர்) அதன் மூலம் பயனடைகின்றார்.''

மேலும் இப்னுதைமிய்யா (ரஹ்) அவர்கள் கூறுகின்றார்கள். ''மரணமானவர் உடலால் செய்யப்படுகின்ற அனைத்து வணக்கங்கள் மூலம் பயனடைகின்றார். அவை தொழுகையா கட்டும், நோன்பாகட்டும்; குர்ஆன் ஓதுவதாகட்டும், பொருள் மூலம் வழங்கப்படும் ஸதகா துஆ, இஸ்திஃபார் இவை மூலமாகவும் மரணித்தவர் நன்மையடைகின்றார்.

இப்னு தைமிய்யா (ரஹ்) என்பவர்கள், அஹ்லெ ஹதீஸ் மத்ஹபின் நிறுவனர் முஹம்மது இப்னு அப்துல் வஹ்ஹாப் எனும் பெரியாரின் குருபோன்று ஆவார்கள்.

# பொறுமை கொள்க

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''எனது அடியார்களில் ஒருவனுக்கு அவனது உடலிலோ அல்லது பொருளிலோ, குழந்தையிலோ ஏற்படும் சோதனைகளுக்காக, அழகிய பொறுமையை மேற்கொள்வானாயின், மறுமையில் அவனுக்காகத் தராசை நிறுவுவதற்கும், அவனது (அஃமால் நாமா) ஏட்டைப்பிரித் துப் பார்ப்பதற்கும் நான் வெட்கப்படுவேன்!'' என்று அல்லாஹ் கூறுகின்றான்.

# பொறுமைக்குக் கூலி

அனஸ் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றார்கள்:- நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். ''அல்லாஹுத்தஆலா ஜிப்ரயீல் (அலை) அவர்களைப் பார்த்து, ''நான் ஒருவனின் அருமையான குழந்தையைக் கைப்பற்றிக் கொண்டால், அவனுக்கு நான் வழங்கும் கூலி (அம்மனிதன் பொறுமையைக் கைக் கொண்ட காரணத்தி னால்) என்னவென்று நீர் அறிவீரா?'' எனக் கேட்ட போது,

PDF ISLAM

''அல்லாஹ்வே! நீ எங்களுக்கு, அறிவித்துக் கொடுத்ததைத் தவிர மற்றவற்றை நாங்கள் அறியோம்!'' எனக் கூறுவார்கள்.

அல்லாஹ் கூறினான், ''(பொறுமையை மேற்கொண்ட) அவனுக்குரிய கூலி, எனது வீட்டில் ஊழி காலமும் இருப்பதுடன், எனது திருமுகத்தைப் பார்த்து கொண்டே இருப்பதுமாகும்.''

மேலும், நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''ஒருவன் பருவம் எய்தாத நிலையில் மூன்று பிள்ளைகளை இழந்து விடுவானாயின், அப்பிள்ளைகள் அவனுக்கு நரகத்தை விட்டும் காத்திடும் காவலாக அமைந்துவிடும்!

இஹ்யாவு உலூ மித்தீனில் எழுதப் பட்டிருக்கிறது. ''குழந்தைகள் மஹ்ஷர் பெருவெளியில் கூடி நிற்பர். அது சமயம் வானவர்களிடம் ''இவர்களை சுவர்க்கம் கொண்டு செல்லுங்கள் எனக் கூறப்படும். அக்குழந்தைகள் சுவனம் அழைத்துச் செல்லப்படுவர்; அக்குழந்தைகள் சுவனவாயில் அருகில் நின்று எங்கள் பெற்றோர்கள் எங்கே?'' எனக் கேட்பர்,

அப்பொழுது அவர்களுக்கு, ''உங்கள் பெற்றோர்கள் கேள்வி கணக்குகள் கேட்கப்படுகின்றனர்.'' எனக் கூறப்படும், அதைக் கேட்ட அக்குழந்தைகள், ஓவெனக் கதறி அழுவார்கள். அதுசமயம் அல்லாஹ்,

''ஈதென்ன பேரிரைச்சல்?'' என்று வினவுவான் வானவர்கள்,

''இது முஸ்லிம்களின் குழந்தைகளுடைய கூச்சல். தங்கள் தாய் தந்தையர் இன்றி சுவனம் சுழைய மறுக்கின்றனர்'' என்பார்கள்.

அல்லாஹுத் தஆலா, ''மலக்குகளிடம் நீங்கள் இம்மக்கட் திரளில் புகுந்து அக்குழந்தைகளின் பெற்றோர்களையும் சுவனத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விடுங்கள்.'' எனக் கூறுவான்.

ஹிகாயத்: வலிமார்களில் ஒருவர் கூறுகின்றார்கள் ''நான் அறிஞர் சுஃப்யானுத் தவ்ரீ (ரஹ்) அவர்களைக் கனவில் கண்டு,

PDF ISLAM

'தாங்கள் மௌத்' என்னும் இறப்பை எவ்வாறு அனுபவித்தீர்கள்? எனக்கேட்டேன். அதற்கவர்கள்''

''நீர் மரணத்தின் வேதனைகுறித்துக் கேட்காதீர்' என்றார்கள். நான் மீண்டும் அவர்களிடம்,

''அமல்களில் உங்களுக்கு மிகவும் பயனளித்த அமல் எதுவென்று கேட்டேன், ''எல்லா அமல்களும் பயனளித்தன; எனினும், நான் கேள்வி கணக்குகளை விட்டுப் பாதுகாப்புப் பெற்றது, எனது குழந்தை இறந்தபோது நான் பொறுமையை மேற்கொண்டு.

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ

''இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்'' என்று சொல்லி அமைதி கொண்டேன். அதன் பொருட்டு அல்லாஹுத் தஆலா என்னைப் பார்த்து, ''நான் உம்முடைய ஈரல் குலைத்துண் டாகிய குழந்தையைக் கைப்பற்றிய போது, நீர் பொறுமையுடன்

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ

''இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்'' எனக் கூறி என்னைப் புகழ்ந்தீர் அது உமக்கு மறந்துபோய் விட்டதா? நான் உம்முடைய பதவியை உயர்த்தி விட்டேன்'' எனக் கூறினான்.

ஹிகாயத்: நபி சுலைமான் (அலை) அவர்களின் மகன் இறந்துவிட்டார். நபி அவர்கள் மிகவும் சலிப்புற்றார்கள். அது சமயம் இருவானவர்கள் வழக்காளிகள் போல் சென்று வழக்காடினார்கள். அவர்களுள் ஒரு வானவர்,

''நான் செடி ஒன்றை நட்டேன்; அது பெரிய மரமாகி அதனை அறுக்கும் சமயம் இவர் அம்மரத்தைப் பாழ்படுத்திவிட்டார்.'' என்றார்கள், இது குறித்து நபி அவர்கள் கேட்க,

PDF ISLAM

இரண்டாம் வானவர், "நான் வரும் பாதையின் வலப்பக்கமும் இடப்பக்கமும் இடத்தை அடைத்துக் கொண்டு பாதைக்கு இடையூறு அளித்தது. வழியை அடைத்து நின்றதால் அம்மரத்தை நான் வெட்டினேன்" என்றார்கள்.

அப்பொழுது நபி அவர்கள், முந்தியவரிடம், "நீர் ஏன் பாதையில் மரம் நட்டீர், நடைபாதையை அடைத்தால், போக்கு வரவிற்கு இடையூறு என்று தெரியாதா? உமக்கு அறிவில்லையா?" எனக் கேட்டார்கள். இரண்டாமவர்,

"நீர் ஏன் மகனின் இறப்பிற்காக மிகவும் சலிக்கின்றீர்; மரணம் என்பது மறுமையை அடைந்திடும் பாதை என்பதை அறியமாட்டீரோ?" எனக் கேட்டார்கள். இதைக் கேட்ட நபி அவர்கள், அல்லாஹ்விடம் தவ்பா செய்து, கவலையை விட்டார்கள்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள். "எவன் இறந்துவிட்ட தனது குழந்தைக்காகப் பொறுமையை மேற் கொள்கின்றானோ, அவனுக்கு அல்லாஹ் உஹத் மலையளவு நன்மைகளை அளிக்கின்றான். எவன் இருகுழந்தைகளின் இறப் பிற்காகப் பொறுமையினைக் கைக்கொள் கின்றானோ அவனுக்கு ஓர் ஒளியை நன்கொடையளிக்கின்றான். அவ்வொளி யானது மஹ்ஷரில் அவனுக்கு முன்னால் செல்லும். எவன் மூன்று குழந்தை கள் இறந்த காரணத்தால் பொறுமை கொள்கின்றானோ அவனுக் குக் கெட்ட செயலின் காரணமாக நரகம் செல்லும் வேளையில் நரக நெருப்பு மூடப்பட்டு விடுமென்றார்கள். *தர்கியத்துல் கவாதீர்*

இங்கு இன்னுமொரு நிகழ்ச்சியினைக் காண்போம். ஹலரத் இப்னு உமர் (ரலி) அவர்களின் குழந்தை இறந்துவிட்டது; அதனை அடக்கம் செய்த நேரத்தில் அவர்கள் சிரித்தார்கள். ஏன் சிரித்தீர்கள்?" எனக் கேட்கப்பட்டது. அதற்கு அவர்கள்,

"குழந்தையின் பிரிவால் நான் சலிப்புறுவேன் என்று ஷைத்தான் எண்ணினான்; நான் சிரித்ததன் மூலம் அவனின் முகத்தைக் கறுகச் செய்துவிட்டேன்." என்றார்கள்.

PDF ISLAM

பாருங்கள்! அவர்களின் 'தக்வா' எனும் இறையச்சம், எகீன் எனும் உறுதி, எந்த அளவிற்கு இருந்திருக்கிறது.

ஃபுலைல் (ரஹ்) அவர்கள் முப்பதாண்டு காலம் சிரிக்காமல் இருந்தார்களாம். அவர்களின் மகன் அலீ அவர்கள் இறந்துவிட்ட அன்று சிரித்தார்களாம். இதற்குரிய காரணத்தை அவர்களின் இனிய தோழர் அபூஅலிய்யுர் ராஸி கேட்ட போது,

"அல்லாஹுத்தஆலா எந்தச் செயலை உவந்தானோ நானும் அதை உவந்து மகிழ்வு கொண்டேன்" என்றார்கள்.

إِرْشَادُ الْعِبَادْ

எவர் தமக்கு ஏற்படும் முஸீபத்திற்குப் பொறுமை காட்டுகின் றாரோ அவருக்கு முன்னூறு உயர்ப்பதவிகளும் இபாதத்திற்காகப் பொறுமையை ஏற்றவருக்கு அறுநூறு உயர்பதவிகளும், தங்கடம் நோய்களுக்காக பொறுமையை மேற்கொண்டவருக்கு ஒன்பதினா யிரம் தரஜா உயர்ப்பதவிகளும் அல்லாஹ் அளிப்பான். என்று நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்.

تَنْبِيهُ الْغَافِلِينَ

"இடுக்கண் வருங்கால் நகுக"!

## ஒப்பாரி வைக்காதே!

இன்றைக்கு நம்மவர்களில், குறிப்பாகப் பெண்கள் மௌத்து வீடுகளில் மய்யித்தை வைத்துக் கொண்டு அல்லது அடக்கம் செய்த பின்னர், காஃபிர்களைப் போன்று மாரில் அடித்துக் கொண்டு, ஒப்பாரி வைத்து அழுவதைப் பார்க்கின்றோம் அச்செயல் மிகவும் இழிவானதும், வெறுக்கத் தக்கதுமாகும்.

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:

النَّائِحَةُ يَوْمَ الْقِيٰمَةِ تَنْبَحُ كَمَا يَنْبَحُ الْكَلْبُ

PDF ISLAM

''அன்னாயிஹத்து யவ்மல் கியாமத்தி தனீஹு கமாயனி ஹுல் கல்ப.''

ஒப்பாரி வைத்து அழுபவள் மறுமை நாளில், நாய் ஊளையிடுவது போன்று ஊளையிடுவாள்! என்றும்,

''ஒப்பாரி வைத்து அழுபவள் மீது அல்லாஹ்வின் சாபம் எனும் போர்வை போர்த்தப்பட்டுள்ள நிலையிலும் அவள் தன் தலையில் கைவைத்தவாறு, ''என்னுடைய கைசேதமே! என்னுடைய கைசேதமே!'' எனச் சொல்லிய வண்ணம், புழுதியில் புரண்டவளாயும், சாம்பலில் புரண்டவளாயும், புதை குழியிலிருந்து வெளிப்படுவாள்!'' என்றும்,

''ஒப்பாரி வைப்பவளுக்கும், அதைக் கேட்டுக் கொண்டிருப்பவளுக்கும், தலையை மொட்டை அடித்துக் கொள்பவளுக்கும், தலையை அவிழ்த்து விட்டுத் தலைவிரிகோலமாய் இருப்பவளுக்கும், வேகமாகக் கூச்சல் போட்டு அழுபவளுக்கும், தான் மாதவிடாயாக இருக்கும் நிலையில் இல்லை என்றும் கூறுபவளுக்கும், மாதவிலக்காக இல்லாத போது தம் கணவனிடம் மாதவிலக்குடன் இருப்பதாகக் கூறுபவளுக்கும், அல்லாஹ்வின் சாபம் உண்டாகும்.''

ஹஸன் பஸரீ (ரஹ்) அவர்களிடம் ஒருவர் கேட்டார். ''நபி (ஸல்) அவர்கள் காலத்தில் 'முஹாஜிரீன்கள், அன்சாரிகளுடைய மனைவியர் ஒப்பாரி வைத்து அழுதுள்ளார்களா?'' என்று,

அதற்கு ஹசன் பஸரீ (ரஹ்) அவர்கள் 'அல்லாஹ்வின் மீது ஆணையாக! அவர்கள் அவ்வாறு செய்ததில்லை. எனினும், ஒரு பெண்ணின் தந்தை, தமையன், மகன் மூவரும் மார்க்கப் போரில் மாண்டுபோயினர்: அது சமயம், அப்பெண் அழுதவளாக நபி (ஸல்) அவர்களிடம் வந்தாள். நபி (ஸல்) அவளிடம்,

''நீ ஏன் அழுகின்றாய்?'' எனக் கேட்ட போது,

''என் ஆண் பிள்ளைகளை இழந்துவிட்டேன்'' என்றாள். அப்பெண்ணுக்கு ஆறுதல் கூறி, ''நீ பொறுமையைக் கடைபிடி. அல்லாஹ் உனக்குச் கவனத்தை அளிப்பான்!'' என்றார்கள். அவர்கள் கூறியதைக் கேட்டது முதல் அப்பெண் தம் வாழ்நாளில் அழவேயில்லை.

PDF ISLAM

இக்காலப் பெண்கள் முகத்தைக் கீறிக் கொள்வதும், ஆடைகளைக் கிழித்துக் கொள்வதும், தலை மயிரை அவிழ்த்துவிட்டு, ஷைத்தானின் இராகம் பாடுபவர்களாக இருக்கின்றனர்.

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறியுள்ளார்கள்: அல்லாஹுதஆலாவிடம் இரு சப்தங்கள் மிகக் கெட்டதாக இருக்கின்றன. ஒன்று, முஸீபத்தின் போது அழுவதும், மகிழ்ச்சியின் போது இராகம் பாடுவதுமாயிருக்கும்.

# அழுவதன் காரணமாக மய்யித்துக்கு வேதனை!

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்: ''ஒருவன் செய்த பாவச்செய லுக்காக, மற்றொருவனை மறுமையில் வேதனை செய்யப்படமாட்டாது. ஆனால் உயிருடன் இருப்பவர்களின் அழுகை, ஒப்பாரியின் காரணமாக மய்யித்தை வேதனை செய்யப்படும். ஆம்; இறந்தவர் களுக்காகத் தங்கள் வேதனையை வெளிப்படுத்துவது தவறல்ல; கண்ணீர் விடுவதும் குற்றமில்லை, நபி (ஸல்) அவர்கள் கண்ணீர் விட்டுள்ளார்கள். கதறுவதோ, கூச்சலிட்டு அழுவதோ கூடாத செயலாகும்.

# ஒரு நிகழ்ச்சி

ஒரு பெரியார் ஒரு பெண்ணை மணக்க நாடிய போது, ''நீ ஒப்பாரி வைத்து அழுவாயாயின் உன்னைத் தலாக்குச் சொல்லிவிடுவேன்! என்னும் நிபந்தனையுடன் அவளை மணந்து கொண்டார். சில காலத்துக்குப்பின், ஒரு குழந்தைப் பிறந்தது. அது நான்காம் வயதில் இறந்து விட்டது. அப்பெண் தலாக்கை அஞ்சி பொறுமையாக இருந்து விட்டாள்; கண்ணீரும் சிந்தவில்லை.

சில காலத்திற்குப்பின் இன்னொரு குழந்தைப் பிறந்தது. அக்குழந்தையும் நான்கு வயதில் இறந்து விட்டது. அப்பொழுதும் அவள் பதறாமல் பொறுமையுடன் இருந்துவிட்டாள். அப்பெரியார்

PDF ISLAM

முதல் குழந்தை இறந்தது முதல் இரவின் பின்னேரத்தில் அக்குழந்தையின் கப்ரு அருகே சென்று, அக்குழந்தையின் பெயரைக் கூறி அழைப்பார்; அப்பொழுது கப்ரு பிளந்து பிள்ளை வெளியில் வந்து மரியாதையுடன் அவர் முன் அமரும். அவர் அக்குழந்தைக்குக் குர்ஆன் ஓதிக் கொடுப்பார்.

சுப்ஹு நேரத்தில் மீண்டும் கப்ருக்குள் புகுந்துவிடும். இரண்டாவது குழந்தையும் இவ்வாறே வெளிவந்து ஓதிக் கொண்டு மண்ணறை சென்றுவிடும். இவ்வாறிருக்கும் போது, ஒரு நாள் அவரின் மனைவி, தம் கணவர் ஒவ்வொரு நாளும் இரவின் பின்னேரத்தில் எழுந்து எங்கு செல்கின்றார் பார்ப்போம் என எண்ணி. அன்றிரவு பின்னேரத்தில் மறைந்திருந்து, கணவர் வெளியே புறப்பட்டதும் அப்பெண்ணும் அவர் அறியாதவாறு பின் தொடர்ந்து கப்ருஸ்தான் சென்றாள்.

அப்பெரியார் வழக்கம் போல் தம் குழந்தைகளின் பெயர் கூறி அழைக்க, அவ்விரு குழந்தைகளும் வெளிவந்து அவரின் முன் அமர்ந்து திருக்குர்ஆன் ஓதின. இக்காட்சிகளைக் கண்ணுற்ற அப்பெண்ணின் கண்கள் அவளையறியாமலேயே இரு சொட்டுக் கண்ணீரைச் சிந்தின. அதன் பின் விரைவாக அவளின் கணவருக்கு முன்பே வீடு வந்துவிட்டாள்.

மறுநாள் அப்பெரியார் வழக்கம் போல் மண்ணறை சென்று தம் பிள்ளைகளை அழைத்தார். குழந்தைகளை வழக்கத்திற்கு மாற்றமாகச் சிறிது நேரங்கழித்தே வெளிவந்தன. தாமதித்து வந்ததன் காரணத்தைத் தந்தையார் வினவ,

“எங்களை இரண்டு ஆறுகள் குறுக்கே வந்து தடுத்து விட்டன; அவற்றைக் கடந்து வருவதற்கு மிக நீண்ட நேரமாகிவிட்டது,” என்று கூறின.

தந்தையார் “இவ்வளவு நாட்களாகக் குறுக்கிடாத ஆறு இப்பொழுது எங்கிருந்து வந்து குறுக்கிட்டது?” என வினவினார்.

PDF ISLAM

"எங்களின் தாய் எங்களைப் பார்த்து இரு சொட்டுக் கண்ணீரைச் சிந்தினார்; அவை இரண்டும் எங்களுக்குக் குறுக்கே இரண்டு ஆறுகளாகப் பெருகிவிட்டன.! எனக் குழந்தைகள் கூறின.

அப்பெரியார், 'என் அருமைக் குழந்தைகளே! இனி நான் உங்களுக்குத் துன்பம் கொடுக்க மாட்டேன்.' எனக் கூறிவிட்டு, சுப்ஹு நேரத்தில் அக்குழந்தைகளை அனுப்பி வைத்துவிட்டு, வீட்டிற்கு வந்து தம் மனைவியைத் தலாக் கூறி விட்டுத் தம் எஞ்சிய வாழ்நாட்களைப் பள்ளிவாசலில் தங்கி இறை வணக்கத்தில் ஈடுபட்டு இவ்வுலகைத் துறந்தார்.

எனவே, இறையன்பர்களே! அல்லாஹ் தன் அருள்மறையில்,

"நபியே! பொறுமையாளர்களுக்கு நீர் நன் மாராயம் கூறும்! அவர்கள் எத்தகைய பொறுமையாளர்கள் என்றால் அவர்களை முஸீபத்துகள் அணுகினால் அவர்கள்

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ ۝

"இன்னா லில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன்".

நிச்சயமாக நாங்கள் அல்லாஹ்விற்காக இருக்கின்றோம்; மேலும், அவனிடமே மீளக் கூடியவர்களாயும் இருக்கின்றோம் எனக் கூறுவார்கள். அவர்களின் மீது அல்லாஹ்வின், அருளும் சுவனமும் ஏற்படுத்தப்பட்டுள்ளது. மேலும், அவர்கள் நேர்வழி பெற்றவர்களாவர்."

*பகரா.*

நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் கூறினார்கள்:– "எவன் தனது சிறிய குழந்தை இறந்துவிட்டதற்காகப் பொறுமையைக் கைக்கொண்டு,

إِنَّا لِلّٰهِ وَإِنَّا إِلَيْهِ رَاجِعُوْنَ ۝

"இன்னாலில்லாஹி வஇன்னா இலைஹி ராஜிஊன், வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லா பில்லாஹில் அலிய்யில் அளீம்"

PDF ISLAM

எனக் கூறுவனாயின், அவன் மீது அல்லாஹுத்தஆலா தனது ரஹ்மத் என்னும் அருளைப் பொழிந்து, அவனைப் பொருந்திக் கொள்வதுடன், அவனின் குழந்தையை அவனுக்காக ஹவ்லுல் கவ்தர் எனும் நீர்த் தடாகத்தில் தங்கச் செய்கின்றான். மறுமை நாளில் கடுமையான நீர் வேட்கை (தாகம்) உண்டாகித் தவித்திடும் வேளையில் அக்குழந்தைகள் 'ஹவ்லுல் கவ்தரில் இருந்து நீர் புகட்டுவார்கள்.''

எனவே, பொறுமை எனும் பொன் காப்பை அணிந்து அல்லாஹ்வின் திருப்பொருத்தத்திற்கும், அவனின் திருக்காட்சிக்கும் உரியவர்களாக ஆவோமாக! அல்லாஹ் நமக்குப் பொறுமையுடன் மறுமையை அடைந்திட நல்லுதவிபுரிவானாக! ஆமீன்!

إِنَّ اللّٰهَ مَعَ الصَّابِرِيْنَ ۝

இன்னல்லாஹ மஅஸ்ஸாபிரீன்

நிச்சயமாக! அல்லாஹ் பொறுமையாளருடன் இருக்கின்றான். *அல்குர்ஆன்*

# ஜனாஸா தொழுகை (ஷாபியீ)

## சுருக்கமான விளக்கங்கள்

1. முதல் தக்பீர் கட்டியவுடன் ஸூரத்துல் பாத்திஹா (அல்ஹம்து) ஸூரா ஓத வேண்டும்.

2. இரண்டாவது தக்பீர் கட்டியவுடன், அத்தஹியாத்தில் ஓதக் கூடிய ஸலவாத் ஓத வேண்டும்.

3. மூன்றாவது தக்பீருக்குப் பிறகு, மைய்யித்திற்கு துஆச் செய்ய வேண்டும்.

மையித் ஆணாக இருந்தால் 'அல்லாஹும் மங்பிகர்லஹு வர்ஹம்ஹு' என்றும்

மையித் பெண்ணாக இருந்தால் அல்லாஹும்ம மங்பிர்லஹா வர்ஹம்ஹா என்று ஓதவும்.

பெரிய துஆ பாடமுள்ளவர்கள் பெரிய துஆவை ஓதவும்

4. நான்காம் தக்பீருக்குப் பிறகு இரண்டு ஸலாம் கொடுக்கவும்.

PDF ISLAM

# கிதாபுல் இத்தா
# 'இத்தா பற்றிய விளக்கம்'

'இத்தா இரு வகைப்படும்.

ஒன்று, கணவன் இறந்ததும் மனைவி மேற்கொள்ளும் 'மவ்த்துடைய இத்தா'

இரண்டாவது, மணவிலக்கு (தலாக்), ஃபஸ்க் (பிரித்தல்) ஆகியவற்றின் மூலம் கணவனிடமிருந்து பிரிந்து விட்ட ஒருத்தி மேற்கொள்ளும் 'இத்தா' வாகும்.

ஒரு பெண் திருமணத்திற்கு முன் தம் பெற்றோரின் பாதுகாப்பில் இருக்கின்றாள். எப்பொழுது அவள் ஒருவனை மணந்து கொண் டாகளோ, அன்றிலிருந்து தனது வாழ்விலும் தாழ்விலும் கணவனின் பாதுகாப்பில் வந்து விடுகின்றாள்.

அன்றிலிருந்து தம் பெற்றோரை விடத் தன் கணவனையே மிகுதி யாக நேசிப்பதற்கு இவள் கடமைப்பட்டவளாக ஆகி விடுகின்றாள்.

கணவன் இறந்து விட்டால் அவனுடன் சுடலையில் அவளும் (மனைவி) உடன்கட்டை ஏறும் வழக்கம் பண்டைக் காலத்திலும் இருந்தது. இக்காலத்திலும் அத்திய வழக்கம் இருந்து வருகிறது.

அவர்களுக்குக் கணவனின் சொத்தில் உரிமையில்லாத காலமொன்றும் இருந்தது.

தூய இஸ்லாம் இக்கொடிய வழக்கங்ளுக்கு மாறுபட்டு நிற்கின்றது. பெண் களுக்குச் சொத்தில் பங்கும், தாம் விரும்பாவிடில் தன் கணவனிடமிருந்து 'ஃபஸ்க்' 'குல்வு'கள் மூலம் பிரிந்து வாழும் முழு உரிமையும் விரும்பினால் இன்னொருவனை மணந்து வாழும் உரிமையும் தந்து வாழ வைக்கிறது.

கணவனை இழந்த பெண்ணும், மணமுறிவு (தலாக்) கூறப்பட்ட வளும் குறிப்பிட்ட நாட்கள் வரைத் தனித்திருக்குமாறு இஸ்லாம் கூறுகிறது.

PDF ISLAM

கணவன் வெளிநாடுகள் சென்று பத்துப் பதினைந்து ஆண்டுகள் இருந்திடினும் சரியே, கணவன் இறந்ததால் விதவையானவர் அனைவரும் இத்தா இருந்தேயாக வேண்டும் என்பதிலிருந்து இந்த உண்மை புலனாகிறது. இதற்கு மாற்றமாக எவள் நடந்தாலும் அல்லாஹ்விடம் பாவியாவாள்; தண்டனைக்குரியவளும் ஆவாள்.

## இத்தாவில் இருப்பவர்களின் கவனத்திற்கு:

இத்தாவில் இருக்கும் பெண் வயதில் சிறியவளாயிருப்பினும் வயது முதிர்ந்தவளாயிருப்பினும், தங்களை ஒப்பனைகள் செய்து கொள்வதும், தங்கம், வெள்ளி முதலிய அணிகலன்கள் (ஆபரணங்கள்) அணிவதும், மணம் (அத்தர், செண்ட்) பூசிக் கொள்வதும், காரணமின்றி சுருமா இட்டுக் கொள்வதும் விலக்கப்பட்டுள்ளன.

வெற்றிலை போடலாம். மணமற்ற (வாசனையில்லாத) எந்த எண்ணெயும் தலைக்குத் தேய்த்துக் கொள்ளலாம்.

கணவன் இறந்த வீட்டிலேயே மனைவி 'இத்தா' இருக்க வேண்டும். கணவனுடன் வெளிநாட்டில் மனைவி இருக்கும் போது கணவன் இறந்து விடுவானாயின், அங்கு அவள் 'இத்தா' இருக்க வசதியில்லாமல் போய்விடின், அவள் தன் தாய் நாடு திரும்பி, மீதிக் காலத்தையும் 'இத்தா'வில் கழிக்க வேண்டும்.

கணவனை இழந்த கைம்பெண்களுக்கு வாய்ப்பு வசதியுள்ளவர்கள் அவள் ஏழையாக இருப்பின் உதவிகள் செய்திட வேண்டும்.

நபி (ஸல்) கூறினார்கள்: "கணவனை இழந்த பெண்களுக்கு உதவி செய்பவர்களும், ஏழைகளுக்கு உதவி செய்பவர்களும், மார்க்கப் போரில் ஈடுபட்டவர்களைப் போன்றாவார்கள்."

தண்ணீர், பெருங்காற்று, நெருப்பு போன்றவற்றிலிருந்து தன்னையும் பிள்ளைகளையும் பாதுகாத்துக் கொள்வதற்காகவும், கள்ளர்களின், அண்டை வீட்டாரின் தீமைகளை விட்டும், தொல்லைகளை விட்டும் தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காகவும், தன் வீட்டை விட்டும் வெளியேறி பாதுகாப்பான வேறு ஓர் இடத்திற்குச் சென்று 'இத்தா' இருக்கலாம்.

PDF ISLAM

# இத்தாவின் கால எல்லை

"உங்களின் மரணம் காரணமாக விதவையாக்கப்பட்ட பெண்கள் நான்கு மாதம், பத்து நாட்கள் ஒதுங்கி இருப்பார்களாக." *(அல்குர்ஆன் 2:34)*

அதாவது 'இத்தா' இருப்பவர்களாக என்று திருமறை கூறுகிறது.

நபி (ஸல்) அவர்கள் "அல்லாஹ்வின் மீதும், மறுமை நாளின் மீதும் ஈமான் கொண்ட ஒரு பெண் (எவருடைய மரணத்திற்கும், இறந்தவர் தனது தாய், தந்தை எவராயினும் சரியே) மூன்று நாட்களுக்கு மேல் துக்கம் மேற்கொள்ள மாட்டாள்." என இயம்பினார்கள்

"ஆனால், இறந்தவர் கணவராக இருந்தால் மட்டும் அவள் நான்கு மாதம் பத்து நாட்கள் துக்கம் மேற்கொள்வது கடமை" எனக் கூறியுள்ளார்கள்.

"கணவன் இறந்திடும் சமயம் மனைவி கருவுற்றிருந்தால் பிள்ளைப் பேறு வரை இத்தா இருந்தாக வேண்டும். *(அல்குர்ஆன் 65:4)*

கணவன் இறந்ததுமே, அவள் பிள்ளையைப் பெற்று விடுவாளாயின், அவளின் இத்தாவும் முடிந்து விடும்.

சிலபொழுது கணவன் இறந்திடும் சமயம் அவள் ஒரு கர்ப்பிணியாக இருப்பாளாயின், அவள் பேறு காலம் வரை இத்தா இருந்தாக வேண்டும். இஃது அல்லாஹ்வின் கட்டளையேயன்றி மனிதனின் திட்டமல்ல.

ஒருத்திக்குத் தன் கணவன் இறந்த செய்தி ஒரு மாதம் கழிந்த பின் அறியவரின், அன்றிலிருந்து நான்கு மாதம் பத்து நாட்கள் இருக்க வேண்டிய தில்லை; மீதியுள்ள மூன்று மாதம் பத்து நாட்களே இத்தாவைக் கழிப்பாள்.

# இத்தாவின் நோக்கம்:

'மவ்துடைய இத்தா' என்பது ஷரீஅத் சட்டப்படி கணவன் இறந்ததிலிருந்து நான்கு மாதம் பத்து நாட்கள்வரையும் வேறு ஒருவனுக்கு மண முடிக்காமலிருப்பதும், கணவனின் இறப்பிற்காக துக்கம் மேற்கொள்வதுமாகும், வேறு சில கருத்துகளும் உள்ளன.

நூறு வயதுக் கிழவியாக இருந்தாலும், எட்டு வயது சிறுமியாக இருந்தாலும் சரியே! அவள் ஏழையாயினும், சீமாட்டியாயினும் சரியே.

PDF ISLAM

'இத்தா'வில் இருக்கும் பெண் தனது வாழ்க்கைக்காக உழைத்துத்தான் உண்ண வேண்டும் என்னும் கட்டாய நிலை இருப்பின், அவள் அந்நிலையில் அடக்கத்துடன் வெளியில் சென்று, தனக்குரிய வாழ்க்கை வசதியைத் தேடிக் கொள்ளலாம்.

இரவு நேரங்களில் அந்நிய ஆடவர் இருக்கும் வீடுகளில் தங்கக் கூடாது.

தன்னுடன் பேச்சுத் துணைக்கு வேறு எவரும் இல்லாது போய்விடின், அண்டை வீட்டார் ஆகுமானவர்களாயிருப்பின் அவர்களுடன் பேசலாம்.

கணவனை இழந்த பெண் வணக்க வழிபாடுகளிலும், குர்ஆன் ஓதுவது, திக்ர் செய்வது போன்றவற்றில் ஈடுபட்டிருப்பது மிகச் சிறந்ததாகும்.

# "மஹ்ரம்கள்" யார்?

ஒரு பெண் இத்தாவில் இருக்கும் பொழுது மஹ்ரமான ஆண்கள் அவளுடன் பேசலாம்.

மஹ்ரம் என்போர், மகன், அண்ணன், தம்பி, பேரன், அண்ணன் மகன், தங்கை மகன், மகளை மணந்த மருமகன் தாய் மாமன் இவர்களைப் போன்றவர்கள்.

மஹ்ரம் அல்லாதவர்கள் எனப்படுவோர் திருமணம் முடித்துக் கொள்ள ஹலால் ஆக்கப்பட்டவர்கள். அதாவது, சிச்சா மகன், சாச்சி மகன், பெரியம்மா மகன், பெரியப்பா மகன், மாமி மகன், மாமா மகன், கணவனுடன் பிறந்த சகோதரர்கள் இவர்கள் அனைவரும் மஹ்ரம் அல்லாதவர்கள் ஆவர்.

இத்தகையவர் மஹ்ரம் அல்லாதவர்கள் எனப்படுவதால், இவர்கள் கணவனை இழந்து 'இத்தா'வில் இருக்கும் பெண்ணைப் பார்ப்பது எவ்வாறு ஹராமாக்கப்பட்டுள்ளதோ, அவ்வாறே சாதாரண காலங்களிலும் கூட இவர்கள் முன் திரையின்றி ஒரு பெண் இருக்கக் கூடாது.

'ஆலிம்கள், ஷைகுமார்கள், முஅத்தின்கள், பாவாக்கள், லெப்பைகள் முதலியவர்கள் எம்முடைய தந்தையைப் போன்றவர்கள்' என்று எண்ணிக் கொண்டு, அவர்களின் முன் திரையின்றியும், கூச்சமின்றியும் சிலர் பேசிப் பழகிவருகின்றனர். இத்தகைய எண்ணம் ஷைத்தானின் தூண்டுதலாகும் என்பதை அப்பெண்கள் உணர்வார்களாக!

PDF ISLAM

# இத்தாவும், பித்அத்துகளும்

நம் சமுதாயத்தில் அறியாமையின் காரணமாக எத்தனையோ பித்அத்தான அனாச்சார, தீய பழக்கங்கள் நுழைந்து விட்டன; தேவையற்ற சடங்குகள் சம்பிரதாயங்கள் கடை பிடிக்கப்பட்டு வருகின்றன. இந்நிலையில் 'இத்தா'விலும் சில அனாச்சார வழக்கங்கள் புகுத்தப்பட்டு விட்டன.

சில கிராமங்களில் 'இத்தா'விற்காக ஒரு தனி அறையை ஒதுக்கி, அந்த அறை முழுவதும் வெள்ளைத் துணியால் மூடப்பட்டு ஆண்களின் குரல் உள்ளே கேட்டுவிடக் கூடாது என்று முடிவு செய்து, ஜன்னல் கதவுகளை யெல்லாம் மூடி, அந்த அறையை மின்விளக்கின் வெளிச்சம் இன்றி, சிமிழ் விளக்கின் வெளிச்சம் மட்டுமே இருக்கச் செய்து, அதனுள் 'இத்தா' இருக்குமாறு பெண்களைத் தள்ளி கொடுமைப்படுத்துகின்றார்கள்.

சில பகுதிகளில் 'இத்தா'வில் இருப்பவள் பத்திரிகைப் படிப்பதையும் தடை செய்து, கண்ணாடிப் பார்ப்பதற்கும் அனுமதி மறுத்து விடுகின்றனராம்.

இன்னும் சில ஊர்களில் சில கொடிய பழக்கம் உள்ளது. தாய் 'இத்தா'வில் இருப்பாள்; மகள் கருவுற்றிருப்பாள். இந்நிலையில் தாயும் மகளும் சந்தித்துக் கொள்ளக் கூடாதாம்; காரணம், மகளின் வயிற்றிலிருக்கும் குழந்தை பேரனாக இருந்து விட்டால் என்ன செய்வது?

'இத்தா'வில் இருக்கும் நான்கு மாதம் பத்து நாட்கள் வரை முன்னால் கூறப்பட்ட 'மஹ்ரம்'கள் எவர் முன்னிலையிலும் அப்பெண் வரக்கூடாது என்று தடை விதித்து அப்பெண்ணைக் கொடுமைப்படுத்துகின்றனர்.

பருவம் எய்திய மஹ்ரமான எந்த ஆணின் முன்னிலையிலும் கைம்பெண்ணை அனுமதிப்பதில்லை.

'இத்தா' இருக்கும் பெண் நோயுற்றால், அப்பெண்ணுக்குச் சாதாரண காலங்களில் செய்யப்பட்ட மருத்துவத்தைக் கூட இக்காலங்களில் பெண் டாக்டர் வந்து பார்ப்பதற்கும் கூட அனுமதிப்பதில்லை.

PDF ISLAM

எத்தகைய அறியாமை நம் முஸ்லிம் பெண்களிடம்?

இன்னும் சில ஊர்களில் 'இத்தா' இருக்கும் பெண்ணை நோயின் காரணமாக ஓர் ஆண் மருத்துவர் வந்து பார்த்து, மருத்துவம் செய்தாலோ, அல்லது 'இத்தா'வில் இருக்கும் ஒரு பெண், பூனை, அல்லது நாய்களைப் பார்த்து விட்டால் கூட, பார்த்த அந்நாளைக்குப் பகரமாகப் பல நாட்கள் 'இத்தா'வுடைய காலத்தை நீட்டி விடுகின்றார்களாம்.

என்ன கொடுமை? எத்துணை அறியாமை?

குர்ஆனிலோ, ஹதீஸ்களிலோ, இமாம்களின் கூற்றுகளிலோ இல்லாத இத்திய கொடும் கட்டுப்பாடுகளை, அநியாயமாக 'இத்தா'வில் இருக்கும் பெண்களின் மீதுத் திணிக்கப்பட்டு, அவர்களை வேதனைப் படுத்துகின்றார்கள்.

இன்னும் சிலர் நாற்பது நாட்கள் வரை மட்டும் 'இத்தா' இருந்து விட்டு, 'இத்தா'வை முடித்து விடுகின்றார்கள். மறுமணமும் செய்து விடுகின்றார்கள். இச்செயல் மாபெரும் குற்றமாகும்; அத்திருமணமும் கூடாது.

இன்னும் சில அறிவிலிகள், மார்க்கத்தை மதிக்காத உன்மத்தர்கள் மூன்று நாட்களோ, ஒரு நாளோ கடும் இத்தா' என்னும் பெயரால் 'இத்தா' இருக்கும் பெண்ணைத் தனி அறையில் போட்டுப் பூட்டி, உண்பது, குடிப்பது, சிறுநீர்க் கழிப்பது, மலம் கழிப்பது எல்லாமே அறைக்குள்ளேயே என்ற இழிந்த நிலையினை உண்டாக்கி 'இத்தா'வின் தத்துவத்தைக் கேலி செய்து வருகின்றனர்.

இன்னும் சில பகுதிகளில் சில வேடிக்கைகள் நடக்கின்றன. 'இத்தா'வில் இருந்து வெளிவரும் பெண்கள் முதன் முதலாக லெப்பை, முஅத்தின் போன்றவர்களின் முகத்தில் தான் விழிக்க வேண்டுமாம். அதுவரை வேறு எந்த ஆணையும் அவர் தமது சகோதரனாகவே இருந்திடினும் சரியே எவரையும் பார்க்கக் கூடாது என்னும் ஒருகடும் சட்டம் உள்ளதாம்.

மேலும் மய்யித்தினுடைய 'ரூஹ்' மவ்த்தான நாற்பதாவது இரவில் அது வாழ்ந்த வீட்டிற்கு வருமென்று முடிவு செய்து, அந்த மய்யித்துக்கு விருப்பமான (அது சாப்பிட்டு வந்த) உணவு வகைகளையும் அது அணிந்து வந்த ஆடை வகைகளையும் பாத்திரங்களில் நிரப்பி வைத்து, கதவுகளையெல்லாம் திறந்து வைத்து, ஒரு லெப்பையை அழைத்து யாசீன் ஓதி, விடிய விடிய விழித்திருந்து அந்த 'ரூஹ்'வின் வரவிற்காகக் காத்திருப்பார்களாம்.

PDF ISLAM

இதுவும் ஒரு கெட்ட பித்அத்து ஆகும்.

அதன் பின்நாற்பதாம் நாள் காலை ஜமா அத்தார்கள் புடைசூழ கப்றடிக்குப் போய் அதற்குப் பிடித்தமான் ஆடையை அக்கப்றில் போர்த்துவார்களாம்.

அடுத்து, நாற்பது பாத்திஹா செய்ய வேண்டும் என்பதற்காகவும், அவ்வாறு செய்யாவிட்டால் ஊரார் தங்களை ஏளனமாகப் பார்ப்பார்கள், கேலி செய்வார்கள் என்பதற்காக, கடன்பட்டோ, வட்டிக்குக் கடன் வாங்கியோ நாற்பதாம் நாளைப் பெரிதாகச் செய்கின்றனர்.

சிலர் 'இத்தா'வே இருப்பதில்லையாம். காரணம் கேட்டால் "என் கணவர் இறப்பதற்கு முன் என்னை அழைத்து, 'நான் இறந்து விட்டால் நீ 'இத்தா இருக்காதே' என்று கூறிச் சென்று விட்டதால் அவள் 'இத்தா' இருப்பதில்லையாம்.

இவ்வாறு எத்தனையோ வகையான அனாச்சாரப் பழக்கங்கள் நம் முஸ்லிம் சமுதாயத்தவர்களை ஆட்டிப் படைத்து வருகிறது.

"ஒருவர் இறந்து விட்டதன் காரணமாக அனுதாபத்தை வெளிக்காட்டும் பொருட்டு, வழக்கமாக அணியும் ஆடையை மாற்றுவதோ, துக்கத்தின் அடையாளமாக எதையும் ஆடையில் சேர்த்துக் கொள்வதோ, இது போன்று வேறு எதனையும் செய்வதோ கூடாது." *துஹ்பா 3:110*

சிலர் தங்கள் வீட்டில் மவ்த்து ஏற்பட்டு விட்டால், தங்கள் கவலையை வெளிப்படுத்த, கறுப்புச் சின்னங்கள் கறுப்பு ஆடைகள் அணிந்து க்கொள்வதுடன் பல நாட்கள் வரை முகத்தை மழிக்காமல் தாடி வைத்துக் கொண்டுத்திரிவதை வழக்கமாக ஆக்கி வருகின்றனர்.

இச்செயல்கள் யாவும் தூய இஸ்லாத்தை இழிவுபடுத்தும் செயல்கள் ஆகும். இவையெல்லாம் பிற மதத்தவரின் பண்பாடுகளாகும்.

முஸ்லிம்கள் இத்தீய வழக்கத்தை விட்டொழித்து, இஸ்லாம் காட்டும் இனிய நெறிமுறைகளை, வழிமுறைகளைப் பற்றிப் பிடித்து, அல்லாஹ்விற்கும், அவனின் தூதருக்கும் வழிபட்டு, அல்லாஹ்வின் அன்பையும் அருளையும் பெற முயல்வார்களாக!

அல்லாஹ்வே! எங்களை நேரான வழியில் நடத்தாட்டுவாயாக!

*ஆமீன் !*

PDF ISLAM